*Ūḻiyaṉ*

*Malar 19, itaḻ 38*

*March 21, 1940*

Record no. 148

REG. NO. M. 3888 | 12 பக்கங்கள் | விலை அணா ஒன்று

| சந்தா விகிதம் | |
|---|---|
| உள்நாடு வருடச் சந்தா .... | 5—0—0 |
| பர்மா வருடச் சந்தா .... | 6—0—0 |
| வெளிநாடு வருடச் சந்தா .... | 7—0—0 |

# ஊழியன்

| விளம்பர விகிதம் | |
|---|---|
| அங்குலம் 1-க்கு வாரம் 1-க்கு | 0—8—0 |
| நிரந்தர விளம்பரம் அங்.1-க்கு | 1—0—0 |

ஒப்பந்த விளம்பரத்திற்கு மானேஜருக்கு எழுதவும்

(தேசீய வாரப் பத்திரிகை)

வியாழன் தோறும் வெளிவருவது

மலர் 19 | காரைக்குடி, பிரமாதிஸு பங்குனிமீ 8உ வியாழன் (21—3—1940) | இதழ் 38

ராம்காரில் மார்ச் 19-ந் தேதி நடைபெற்ற காங்கிரஸ் மகாசபையில் ராஷ்டிரபதி அஸாத் நிகழ்த்திய தலைமையுரையின் சாரமாவது:—

நமது லக்ஷ்யத்தின் சமீபத்தில் நாம் வரவர, போராட்டமும் பலமாகிறது. இன்று நமக்கு புதிய கஷ்டங்கள் தோன்றியிருக்கின்றன. நெருக்கடியான கட்டதில் நாம் சென்று கொண்டிருக்கிறோம். 1939—ம் வருஷம் ஸெப்டம்பர் மாதம் 3—ம் தேதி யுத்தப் பிரகடனம் செய்யப்பட்ட பிறகு நாம் எடுத்துக்கொண்ட நிலைமை நம்மை எந்தநிலைமைக்குக் கொண்டு போகிறது? இப்போது நாம் எந்த நிலைமையில் இருக்கிறோம்? இது முக்கியமானதாகும். நமது தற்போதைய நிக்கற்ற நிலைமையிலும் உலக அரசியல் சம்பவங்களிலுமிருந்து நாம் பிரிந்திருக்கமுடியாது என்பதை தெரிவிக்கிறோம். பாஸிஸம், நாஸிஸம் ஆகியவற்றினால் ஏற்படும் தீமைகளை நாம் கவனித்து வருகையில் இவற்றைக் காட்டிலும் அதிகத்தீமையுண்டுபண்ணுவதும் தேசங்களின் அமைதிக்கும் சுதந்திரத்துக்கும் பாதகம் விளைவிப்பதும், புதிய தீமைகளுக்கு மூலகாரணமாக விருப்பதுமான பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தை நாம் மறக்கமுடியாது. இது நமது வீட்டையே பிடித்துக்கொண்டு நம் மீதே அதிகாரம் செலுத்துகிறது. இதன் காரணமாகவே ஐரோப்பாவில் யுத்தமேற்பட்டால் தன் இஷ்டப்படி நடந்து கொள்ள அநுமதிக்கப்படாமலுள்ள இந்தியா அதில் யாதொரு பங்குமெடுத்துக் கொள்ளாதென்று மிகத் தெளிவாக நாம் கூறினோம். பிரிட்டிஷ் சர்க்காரால் 1935-ம் வருஷம் இந்தியா கவர்ன்மெண்டுச் சட்டம் இந்தியா மீது பலாத்காரமாகச் சுமத்தப்பட்டது. வழக்கம் போல பிரிட்டிஷ்காரர் இந்தியாவின் உரிமைகளில் பெரும்பாகத்தைக் கொடுத்து விட்டதாக உலகம் நம்பும்படி செய்தனர். இந்தச் சட்டத்தை நிராகரிப்பதெனக் காங்கிரஸ் முடிவு செய்தது. எட்டு மகாணங்களில் காங்கிரஸ்மந்திரி சபைகள் ஏற்பட்டன. இதை நீடித்திருக்கச் செய்யவேண்டியது பிரிட்டனின் கடமையாயிருந்தது.

சமீபத்திலேயே, ஆனால் நாள் தெரியாத ஒரு எதிர்காலத்தில், பிரிட்டன் மிகத் தாராளமாக குடியேற்ற நாட்டு அந்தஸ்தை அளிக்கப் போவதாகச் சொல்லப்படுகிறது. மிகப் பெரிய யுத்தம் ஆரம்பித்தபோது இந்தியாவை அதற்கு தெரியாமல் கலந்து கொள்ளும்படி செய்தனர். காற்று எப்படி வீசுகிறதென்று தெரிந்துகொள்ள இது ஒன்றே போதுமானது. சென்ற யுத்தத்தின் பிறகு வெற்றி மயக்கத்தால் பிரிட்டனும் பிரான்ஸும் நடந்து

ராம்கார் காங்கிரஸ்

## ராஷ்டிரபதியின் பேருரை

### முஸ்லீம்கள் சிறுபான்மையினரா?

★

கொண்ட முறையினால்தான் இத்தாலியில் பாஸிஸமும், ஜெர்மனியில் நாஸிஸமும், உலகில் அமைதிக் குறைவும் ஏற்பட்டன.

இந்தியாவைக் கேட்காமலே யுத்தத்தில் கலந்து கொண்டதாக அறிவித்ததை காங்கிரஸ் எதிர்த்தது மேலும் யுத்த நோக்கங்களை கூறும்படி பிரிட்டிஷ் சர்க்காரை காங்கிரஸ் கேட்டது. காரியக் கமிட்டியானது இக் கோரிக்கையை ஒரு நீண்ட அறிக்கையாகத் தயாரித்து 1939 செப்டெம்பர் 14ந் தேதி வெளியிட்டது. இந்தக் கோரிக்கைக் கூச்சல் இந்தியாவில் மட்டுமே கிளப்பப்பட்டாலும் உண்மையில் அது இந்தியாவின் கூச்சல் மட்டுமல்ல.



ராஷ்டிரபதி அஸாத்

இதற்கு முன் பலதடவை நம்பிக்கை மோசம் போன மனித சமூகத்தின் வேதனைக் கூச்சலாகும்.

காங்கிரஸின் இக் கோரிக்கைக்கு பிரிட்டிஷ் சர்க்கார் சார்பாக இங்கிலாந்திலும் இந்தியாவிலும் தொடர்பாக பல அறிக்கைகள் விடப்பட்டன. வைஸ்ராயின் அறிக்கையில் 'சுதந்திரம், ஜனநாயகம்' என்ற வார்த்தைகள்கூடக் காணப்படவில்லை. இந்தியா சம்பந்தபட்ட மட்டில் பழைய நிலைமை மாறவில்லை. வைஸ்ராயின் அடுத்த அறிக்கையும் திருப்திகரமானதல்லவென்றுகாங்கிரஸ்தீர்மானித்தது. காங்கிரஸ் மந்திரிகள் 8 மாகாணங்களில் ராஜினமா செய்தார்கள். இதுதான் காங்கிரஸ் எடுத்துக்கொண்ட முதல் நடவடிக்கை. மகாத்மா காந்திக்கும் வைஸ்ராய்க்கும் பேச்சுகள் நடைபெற்றன. அறிக்கைகள் வெளிவந்தன. வைஸ்ராய் அறிக்கையின் சாராம்சம், கூடிய விரைவில் இந்தியாவானது பிரிட்டிஷ் குடியேற்ற நாட்டின் அந்தஸ்தை அடையவேண்டுமென்று பிரிட்டிஷ் சர்க்கார் பூர்ண அபிலாஷையுடனிருப்பதாகக் கூறப்படுகிறது. ஆனால் வெளிநாட்டார் தலையீடில்லாமல் தன்னுடைய அரசியலை அமைத்துக் கொள்ளும் உரிமையை பிரிட்டிஷ்காரர் இந்தியாவுக்கு அளிக்க இஷ்டப்படவில்லை.

யுத்த நோக்கங்களைப்பற்றி மிஸ்டர் சேம்பர்லென் பேசுகையில், ஐரோப்பாவிலுள்ள சிறிய தேசங்களில் சுதந்திரம் பாதிக்கப்படாமலும், அடிக்கடி ஆக்ரமிப்பு இல்லாமலும், அவை க்ஷேமமாக வாழவேண்டிய கொள்கையை நிலை நிறுத்துவதற்காகவே இந்த யுத்தத்தை நடத்துவதாகச் சொன்னார்.

இந்தியாவைப் பற்றிய மட்டில் யுத்த நோக்கங்கள் எப்படி என்ற பிரச்னையை நாம் கிளப்பியபொழுது பழைய கொள்கை மாறவில்லை என்று தெரியவந்தது. இப்பொழுதுகூட ஏகாதிபத்ய உணர்ச்சியைக் கைவிடவில்லை. இந்தியா குடியேற்ற நாட்டு அந்தஸ்தைகூடியசீக்கிரம் அடையவேண்டுமென்று பிரிட்டிஷ் சர்க்கார் விரும்புவதாகச் சொல்லப்படுகிறது. இதற்கு முந்தியும் அவர்கள் இம்மாதிரி அபிப்பிராயப்பட்டது எங்களுக்குத் தெரியும். தன் நிலைமையைப் பற்றித்தீர்மானித்து முடிவு செய்யஇந்தியாவுக்கு உரிமையிருக்கிறதா இல்லையா என்பதுதான் நமது கோரான பிரச்னை. இதுதான் இந்தியாவின் முன்னேற்றக் கட்டிடத்தின் அஸ்திவாரம். இன்று ஐரோப்பாவில் நடைபெறும் யுத்தத்தைப் பார்த்தாலே மிருக பலம்தான் தேச உரிமைகளைத் தீர்த்து வைக்கும் கருவியாயிருக்கிறதென்று தெரிகிறது. இது ஒரு புறமிருக்க அறிவாளிகளிடையே காரணம், நியாயம், அமைதி இவைகளை அடிப்படையாகக் கொண்ட உலக தர்மம் நிறுவப்படவேண்டுமென்ற ஓர் உணர்ச்சி பிறந்திருக்கிறது. அனேகஆண்டுகளாக சம்பந்தப்பட்டுள்ளஇரண்டுதேசஜனங்கள் புதியமுறையில் தமது சம்பந்தத்தை நீடித்து வைக்க முயலுவது சாத்தியமா? இது சாத்தியமானல் யுத்தத்தினால் ஏற்படும் கஷ்டங்களுக்கு நிவாரணம் ஏற்படுவதுடன் உலகிலேயே புதிய சகாப்தம் ஏற்படக்கூடும். அதில் நீதியும் அமைதியும் நிலவும். இது முடியாத காரியமல்ல. ரொம்பவும் கடினமான காரியந்தான்.

இருள் சூழ்ந்துள்ள இந்தக்காலத்திலும் மனிதர்களுடைய நல்ல குணத்தில் மகாத்மா காந்திக்கு நம்பிக்கையிருக்கிறது. சமரசத்துக்கான எல்லா மார்க்கங்களையும் கடைபிடிக்க எப்பொழுதும் தயார். யுத்தம் ஆரம்பித்த நாளாய் பிரிட்டிஷ் மந்திரிகள் பலர், பழைய பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமுறை ஒழிந்துவிட்டதென்றும் அமைதியையும் நியாயத்தையும் நிலைபெறச்செய்வதைத் தவிர பிரிட்டிஷாருக்கு வேறெந்த நோக்கமுமில்லையென்றும் உலகத்தை நம்பச்செய்ய பிரயத்தனப்பட்டு வந்திருக்கிறார்கள். ஆனால் உண்மையாக யுத்தத்திற்குமுன் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் எப்படி அமைதிக்கும் நியாயத்திற்கும் இடைஞ்சலாயிருந்ததோ அதே மாதிரிதானிருக்கிறது. பிரிட்டிஷார் கொண்டாடும் உரிமைகளுக்கெல்லாம் இந்தியாவின் கோரிக்கைத்தான் உரைகல். இந்த சமயத்தில் வகுப்புப் பிரச்னை கிளப்பப்படுமென நாம் எள்ளளவும் நினைக்கவில்லை. சுதந்திரம் பெற இந்தியருக்கு உரிமையிருக்கிறதென்ற விஷயத்திலும் விடுதலையடைவது இந்தியாவின் பிறப்புரிமையென்ற விஷயத்திலும் சந்தேகமிருக்கக்கூடிய காலம் மலையேறிவிட்டது. நமது கோரிக்கையை எதிர்த்து நிற்க யாருக்கும் துணிவு இருக்காது. தேசத்தில் மாறுதல் ஏற்பட்டால் எங்கு தங்களுக்கு ஆபத்து நேர்ந்துவிடுமோவென்று அஞ்சி தங்களுடைய விசேஷ உரிமைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கும் வகுப்புகள்கூட கால மாறுதலின் காரணமாக நமது லக்ஷ்யத்தை ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. வகுப்புப் பிரச்னையை அரசியல் பிரச்னையுடன் கலந்து உண்மையான பிரச்னையைக் குழப்பிவிட இங்கிலாந்திலும் இந்தியாவிலும் திரும்பத் திரும்ப முயற்சி நடைபெற்றது.

150 வருஷ காலமாக பிரிட்டன் பிரித்தாளும் முறையை கையாண்டு வருகிறது. உள்நாட்டு வேற்றுமைகளை எடுத்துக்காட்டி தனது சக்தியை பெருக்கிக்கொள்ள பலவகுப்புகளை உபயோகித்துக் கொண்டிருக்கிறது. நமது நாடு அடிமையானதற்கு இதுஒரு முக்கிய காரணம். வகுப்புப் பிரச்னையை நாம் கவனிக்க வேண்டும். ஆனால் அதை, விடுதலையைத் தடை செய்வதற்கு உபயோகிக்கக் கூடாது. பிரிட்டன் மேற்படி காரியத்துக்குத்தான்

(3-ம் பக்கம் பார்க்க)

## பர்மா நிலம் வாங்கும் மசோதா

பர்மா ஜனப்பிரதிநிதி சபையில் சமீபத்தில் நிலம் வாங்கும் மசோதாவின் மீது விவாதம் நடைபெற்றது. அது சமயம் ஸ்ரீ வெள்ளையன் செட்டியார் நிகழ்த்திய சொற்பொழிவில் குறிப்பிட்டிருப்பதை கீழே பார்க்கவும்.

லாபகரமில்லாத செலவினங்களில் வேலை செய்ய ஆர்வங் கொள்வது விவசாயிகளது பலவீனம் என்று நில விவசாயக் கமிட்டியார் தெரிவித்திருக்கிறார்கள். இந்த விவசாயிகளோடு நெருங்கிப் பழகி அவர்களுக்கு உதவி செய்யும் சமூகத்தைச் சார்ந்தவன் நான். ஆகலால் விவசாயிகளுக்கு தற்போது வேண்டியது பணமே தவிர சாகுபடி செய்வதற்கு நிலமல்லவென்பதை எனது அநுபவத்தைக் கொண்டு நான் கூற விரும்புகிறேன். விவசாயிகளுக்கு நிலத்தை யளித்து அவர்களது பளுவை அதிகரிக்கச்செய்வதைக் காட்டிலும் அவர்களுக்கு தற்போது தேவையாயிருக்கும் பணத்தை யளித்து அவர்களுக்கு உதவி செய்வதே அரசாங்கம் செய்யவேண்டிய சரியான வேலையாயிருக்கும்.

இம்மசோதாவில் இரு பாகங்கள் அடங்கியிருக்கின்றன. நிலத்தைப் பெறுவதைப்பற்றிக் கூறுவது ஒரு பாகம். பெற்ற நிலத்தைப் பகிர்ந்தளித்து நிர்வகிப்பதைப் பற்றிகூறுவது மற்றொரு பாகம். முக்கியமான பிரச்னை நிலத்தைப் பகிர்ந்தளிக்கும் பிரச்சனையேயாகும். அரசாங்க பொருளாதார நிலையில், 30 கோடி ரூபாய்க்கு மேல் பிடிக்கும் இத்தகைய முக்கிய மசோதாவை அவசரமுடன் சட்டசபையில் புகுத்தி சட்டமியற்ற துரிதமடையலாகாது. நிலவரி செலுத்த வேண்டிய பொறுப்பு நிலச் சொந்தக்கார முதலாளிகளிடமிருந்து சிறிய விவசாயிகள் வசம் சாரும். இதனால் வசூலிப்பதற்கு பெருஞ்செலவு ஏற்படும். கீழ் பர்மாவில் 50 சதவிகிதம் நிலங்கள், விவசாயிகளல்லாதார் கைவசமிருப்பதாக அரசாங்கம் ஒத்துக்கொள்கிறது. இதில் பாதிக்குங் குறைந்தபாகமே இந்தியர்கள் கைவசமிருக்கிறது. மற்றைய பாதிபாகம் பர்மியரிடமிருக்கிறது. விவசாயிகளல்லாதாரிடமிருந்து நிலங்களைப் பெற்று விவசாயிகளுக்கு அளிக்க அரசாங்கம் விரும்பினால் இந்திய நிலச்சுவான்தார்கள், பர்மிய நிலச் சுவான்தாரர்கள்— இரு சாரரிடமிருந்தும் நிலங்கள் வாங்கப் பெறவேண்டும். ஒருவருக்குச் சொந்தமானச் சொத்தை அவரிடமிருந்து பறித்து மற்றொரு பிரிவினருக்கு அளிப்பதென்பது பிரஜா உரிமைகளில் நியாயமில்லாமல் தலையிடுவதாகும். அவசரமாக இதைச் சட்டம் செய்வதால் யாருக்கும் நன்மைவிளையாது. வாங்கும் நிலங்களை எந்த முறையில் விவசாயிகளுக்கு அளிக்கப் பெறும் என்பதையும் எப்படி அரசாங்கத்தால் அவை நிர்வகிக்கப்பெறும் என்பதையும் இம்மசோதாவில் தெளிவாக விளக்கவேண்டும்.

## ஸர். ஓட்வியர் சுட்டுக் கொல்லப்பட்டார்

### இந்தியாவெங்கும் கண்டனம்

லண்டனில் மார்ச்மீ 13ந் தேதி பயங்கர சம்பவம் ஒன்று நடந்திருக்கின்றது. மாஜி பஞ்சாப் கவர்னர் ஸர். மைக்கெல் ஓட்வியர் சுட்டுக் கொல்லப்பட்டார். லண்டன் காக்ஸ்டன் மண்டபத்தில் கிழக்கிந்தியா சங்கத்தின் ஆதரவில் நடந்த ஒரு கூட்டத்தில் இந்த கோர சம்பவம் நடந்திருக்கின்றது. கூட்டம் முடிந்து எல்லோரும் புறப்படும் சமயம் ஒரு இந்தியன், பத்திரிகை பிரதிநிதிகள் இருக்கும் மேஜையை நோக்கிவந்தான்.

ஒன்றன்பின் ஒன்றாக நான்கு குண்டுகள் வெடித்தன. ஸர். மைக்கேல் ஓட்வியர் கீழே சாய்ந்தார். அவர் மார்பில் ஏற்பட்ட காயத்திலிருந்து ஏராளமாக ரத்தம் வடிந்தது. இந்தியா மந்திரி லார்ட் ஜெட்லண்ட் தன் நாற்காலிக்குப் பக்கத்தில் வீழ்ந்தார். லார்ட் லாமிங்டன், ஸர். லூயி டேன், இருவர் மீதும் குண்டு பாய்ந்தது. மத்ய கிழக்கு பிரதேச விவகாரங்களில் நிபுணரான பிரிகாடியர் ஜெனரல் ஸர். பெர்ஸி ஸைக்ஸ், லார்ட் ஜெட்லண்டுக்குப் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தார். நல்லவேளையாக ஒன்றும் காயமில்லாமல் தப்பினார். கையில் ஒரு துப்பாக்கியுடன் "வழி விடுங்கள்" என்று சப்தம் போட்டுக்கொண்டு, ஒருவர் கூட்டத்தைத் தள்ளிக்கொண்டு கதவு பக்கமாக ஓடினார். ஒவ்வொருவரிடமும் வாக்கு மூலம் வாங்கப்பட்டது. லார்ட் ஜெட்லண்ட் ஒரு பத்திரிகை நிருபரிடம் "எனக்குப் பக்கத்தில் ஒரு சப்தம் கேட்டது. உடனே எனது விலாப் பக்கத்தில் கடுமையான வலி ஏற்பட்டது. அது என்னை அயர்த்திவிட்டது. நான் கீழே விழுந்து கிடக்கும்போது, இன்னம் குண்டு சப்தங்கள் கேட்டன" என்று கூறினார். ஆஸ்பத்திரியில் லார்ட் ஜெட்லண்டின் ஆடையில் ஒரு துப்பாக்கி குண்டு அகப்பட்டது. ஸர். ஓட்வியர் கொல்லப்பட்டார். வேறொருவரும் நல்ல வேளையாக இறக்கவில்லை. விசாரணைக்காக கோர்ட்டுக்குக் கொண்டுவரும்போது அந்த இந்தியன் புன்சிரிப்புடனேயே காணப்பட்டான். காமன்ஸ் சபையில் இது சம்பந்தமாக ஸ்ரீ சேம்பர்லேன் கொல்லப்பட்டவருக்கு அநுதாபம் தெரிவித்துவிட்டு காயமடைந்தவர்கள் வெகு சீக்கிரம் குணமடைய பிரார்த்தனை செய்வதில் எல்லோரும் கலந்துகொள்வார்களென்றும் பிரஸ்தாபித்தார்.

இந்த சம்பவத்தைப்பற்றி காந்திஜி இவர்களைச் சுட்ட செயலானது பயித்தியக் காரச்செயலென்றும் இதனால் அரசியல் பிரச்னைபற்றி முடிவுகட்டுவது பாதிக்கப் படாதென்று நம்புவதாகவும் பிரஸ்தாபித்தார். "இது வருந்தத் தக்கதாகும்" என்று ஸ்ரீ ஜவஹர் பிரஸ்தாபித்தார். இதுபற்றி இந்தியா முழுவதும் கண்டனமிருக்கிறது. இந்தியாவிலுள்ள எல்லா ஸ்தாபனங்களும் தலைவர்களும் ஏகமுகமாக இந்த செய்கையைக் கண்டிக்கிறார்கள். லண்டனிலுள்ள இந்தியர்கள் கண்டித்து அறிக்கை விட்டிருக்கிறார்கள். இதனால் மிகுந்த பரபரப்பு ஏற்பட்டிருக்கின்றது. எல்லா லண்டன் இந்தியப்பத்திரிகைகளும் கண்டிக்கின்றன. ராஷ்டிரபதி மௌலானா ஆஸாத் அஸோஸியேடட் நிருபருக்கு அளித்த பேட்டியில் "விபத்துக்காக நாங்கள் மிகவும் வருந்துகிறோம் இதில் அரசியல் முக்கியம் எதுவுமில்லாமலிருப்பது மனதுக்கு நிம்மதியளிக்கிறது." என்றுகூறினார்.

துப்பாக்கிப் பிரயோகம் செய்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்டிருப்பவரின் பெயர் மகமத் ஸிங் ஆஸாத் என முதலில் சொல்லப்பட்டது. ஆனால் பார்லிமெண்டில் ஸ்ரீ சேம்பர்லென், அவனுடைய பெயர் மோஹன் ஸிங் எனச் சொன்னார். பார்லிமெண்டரி நடவடிக்கைகள் பற்றி உத்தியோக முறையில் வெளியான அறிக்கையிலோ அவனுடைய பெயர் உத்தம ஸிங் எனக் குறிப்பிடப்பட்டிருந்தது. லார்ட் ஜெட்லெண்ட் குண மடைந்து 15-ந் தேதியே தமது வேலையில் ஈடுபட்டார்.

## அறிக்கை

1922ம் வருஷத்திய சென்னைப் பட்டணம் ஸ்டாம்பு ஆக்டால் திருத்தப்பட்ட 1899ம் வருஷத்திய இரண்டாவது ஆக்ட் 49வது செக்ஷனில் சொல்லப்பட்டிருக்கும் கெட்டுப்போன ஜுடிஷல் நான்-ஜுடிஷல் ஸ்டாம்புகளுக்கு ஷை ஆக்ட் 50 வது செக்ஷனில் சில கேசுகளுக்கு இரண்டு மாதத்திற்குள்ளும் சில கேசுகளுக்கு ஆறு மாதத்திற்குள்ளும் ரீபண்டு மனுக்கள்கொடுத்துக்கொள்ளவேண்டுமென்று (Time limit)காலவரை ஏற்பட்டிருக்கிறது. 50வது செக்ஷன்படி அந்தந்த வாய்தாவுக்குள் ஸ்டாம்பு ரீபண்டுக்கு மனுக்கள் செய்துகொள்ளவேண்டும். அப்படி வாயிதாவுக்குள் மனுச் செய்துகொள்ளாமல் வாயிதாத் தர மறுத்துவரப்படும் ரீபண்டு மனுக்கள் தகுந்த காரணம் இருந்தாலொழிய அங்கீகரிக்கப்படமாட்டாது என்பதை இதனால் பொது ஜனங்களுக்கு அறிவிக்கப்படுகிறது. பொதுஜனங்கள் தங்களுக்குச் சட்ட விபரம் தெரியாதென்று சொல்லக்கூடிய காரணங்களும் ஒப்புக்கொள்ளப்படமாட்டாதென்பதை ராமநாதபுரம் கலெக்டர் ஆபீஸிலிருந்து பொது ஜனங்களுக்கு அறிவிக்கப்படுகின்றது.

திபேத்திலுள்ளவர்களுக்கு உலகில் என்ன நடக்கிறதென்பதே தெரியாதாம். உலகில் பத்திரிகையே இல்லாத ராஜ்யம் இது ஒன்றுதான்.

## இராமனாதபுரம் ஜில்லா போர்டு

இராமனாதபுரம் ஜில்லா போர்டின் கூட்டமொன்று பிற்பகல் மார்ச் 12ந்தேதி மதுரையிலுள்ள போர்டு கட்டிடத்தில் போர்டு தலைவர் ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜா எம். எல். ஏ. தலைமையின் கீழ் நடைபெற்றது.

மதுரை, இராமனாதபுரம் ஜில்லாக்கள் தொழிற் சங்கத்திற்கு ரூ. 200 நன்கொடை அளிக்கப்பட்டது.

சென்னை ரோடு அபிவிருத்தி ஸ்பெஷல் இஞ்சினியரால் அங்கீகாரம் செய்யப்பட்டுள்ள மதுரை-தொண்டி ரோட்டில் 4811 மைலிலுள்ள பாலத்திற்கு அபிவிருத்திகள் செயவதற்காக ரூ 15800க்கு ஒரு எஸ்டிமேட் சாங்ஷன் செய்யப்பட்டது. இத்தொகை இந்திய சர்க்காரால் ரஸ்தா அபிவிருத்திகளுக்காக கொடுக்கப்பட்டுள்ள கிராண்டிலிருந்து செலவழிக்கப்படும்.

1939—40க்கு திருத்தியமைக்கப்பட்ட பட்ஜட்டும், 1940-41ம் வருடத்திய பட்ஜட்டும், பாஸ் செய்யப்பட்டன, 1940-41ம் வருடத்திய பட்ஜெட்டில் முக்கியமான அம்சங்களாவன: சிவகங்கை போர்டு பெண்கள் ஹைஸ்கூலில் 5-வது பாரம் ஆரம்பிப்பதும் திருப்பத்தூர் என். எம். போர்டு மிடில் ஸ்கூலில் 4-வதுபாரம் ஆரம்பிப்பதும் ரோடுகள் பராமரிப்புக்காக ரூ 3,34,000 ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஆரம்பக்கல்வி நிதியில் நூற்கும் சாமான்களுக்காக ரூ 500 ஒதுக்கப்பட்டது ரூ 1000க்கு உயர்த்தப்பட்டது. 1940-41ல் வருஷத்திற்கு ஆரம்பகல்வி பட்ஜெட்டில் ரூ 82650 வேண்டியிருப்பதால், பிராவிடெண்ட் பண்டிலிருந்து தற்காலிகமாக ரூ 1,00,000 எடுத்துக்கொள்ளுவதென்று முடிவு செய்யப்பட்டது. மேலும் ஆரம்பகல்வி வருமானத்தை அபிவிருத்தி செய்வதற்காக தற்பொழுதுள்ள கல்வி செஸ் விகிதமானது நிலவரியில் ரூபாய்க்கு 3¼ பைசாவிலிருந்து 4½ பைசாவிற்கு உயர்த்தவோ, அல்லது நில செஸ்ஸில் நூற்றுக்கு 25 விகிதம் அதிகப்படுத்துவதென்று முடிவு செய்யப்பட்டது. தற்காலிகமாக மேற்கொண்டு புதிய பள்ளிக்கூடங்கள் திறக்கப்படமாட்டாவென்றும் முடிவு செய்யப்பட்டது.

சிவகங்கையிலுள்ள போர்டு இன்டஸ்ட்ரியல் பள்ளிக்கூடம் மேற்கொண்டு வேலைசெய்வதை கவனிக்க கீழ்கண்டவர்கள் கொண்ட ஓர் ஸ்பெஷல் கமிட்டி நியமிக்கப்பட்டது. ஸ்ரீமான்கள் வள்ளியப்ப செட்டியார், ராமசாமி நாயுடு, ஆர். வி. ஸ்வாமிநாதன், முகுந்தராஜ அய்யங்கார், சிவலிங்கம், வி. எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார். மற்றும் அநேக கவர்ண்மெண்டு உத்திரவுகள் பதிவு செய்யப்பட்டன. சாதாரண விஷயங்களும் பைசல் செய்யப்பட்டன.

## ராஷ்டிரபதியின் பேருரை

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

இதை உபயோகித்து வருகிறது. வகுப்புப் பிரச்னை தேசத்திலிருக்கிற தென்பதை காங்கிரஸ் ஒத்துக்கொண்டு அதைத் தீர்க்கும் விஷயத்தில் எந்தக் கொள்கையைக் கையாண்டால் உசிதமா யிருக்குமோ அதைக் கையாண்டுமிருக்கிறது. இந்த வழியை விட உயர்ந்த வழியை யாராவது காட்டினால் காங்கிரஸ் அதை ஏற்றுக் கொள்ளத் தயார். மைனாரிட்டிகள் பிரச்சனை இந்தியாவுக்கு மட்டில் ப்ரத்யேகமானதல்ல. காங்கிரஸ் இந்தப் பிரச்னையை அரசியல் நிர்ணயசபை சம்பந்தமாக சேர்த்துக் கவனிக்கும். தங்கள் ஓட்டுக்களைக் கொண்டு தங்கள் பிரதிநிதிகளைத் தெரிந்தெடுத்துக்கொள்ள வேண்டுமென்று மைனாரிட்டிகள் விரும்பினால் அப்படிச் செய்ய அவர்களுக்கு உரிமையுண்டு. வகுப்புச் சச்சரவுகளைத் திணித்துக்கொள்ளும்படி நமக்குச் சொல்லப் படுகிறது. ஆனால் அதை நீக்க நமக்கு சந்தர்ப்பம் கொடுக்கப்படவில்லை. வேண்டுமென்றே இம்மாதிரியான நிலைமை கிளப்பப்பட்டிருக்கிறது.

முஸ்லீம்கள் கலங்குவது ஏன்? சிறிய மைனாரிட்டியாயிருந்தாலும் ஒரு வேளை பயப்படலாம். முஸ்லீம்கள் அரசியலில் மைனாரிட்டிகளாக யிருப்பதாகச் சொல்லுவது உண்மைக்கு மாறானதென்று நான் முன்னதாகச் சொல்லி யிருக்கிறேன்; இப்போதும் சொல்லுகிறேன். இந்தியாவில் முஸ்லீம்கள் தங்களுடைய உரிமைகளைப் பற்றியும் நலன்களைப் பற்றியும் பயப்படுவார்களேயானால் அதுவும் முட்டாள்த்தனமானதுதான். புதிதாக ஏற்பட்ட அரசியல் உணர்ச்சிக்கு எதிராக முஸ்லீம்களை உபயோகித்துக் கொள்ளவேண்டுமென்பதே பிரிட்டிஷ்காரரின் கொள்கையின் நோக்கமாகும். இந்தியாவில் ஒற்றுமையில்லாதபடி பிரிட்டிஷ்காரர் விதை தூவி விட்டார்கள். அது வளர்ந்து மரமாய்விட்டது. மைனாரிட்டி என்றால் எண்ணிக்கையில் குறைவாகவும் பலத்தைக் கொடுக்கக்கூடிய இதர அம்சங்களின்றியும், பக்கத்தில் தன்னை விட பெரிதாகவுள்ள கோஷ்டியிலிருந்து பாதுகாத்துக் கொள்ள நம்பிக்கையில்லாமலும் உள்ளது என்பதே அர்த்தம். இந்தியாவிலுள்ள முஸ்லீம்களின் எண்ணிக்கை 9 கோடியிருக்கும், இஸ்லாமிய சகோதரத்துவப் பிணைப்புகள் காரணமாயும், சமத்வ உணர்ச்சி காரணமாயும் சமூகப்பிளவால் ஏற்படக்கூடிய பல குறைகளிலிருந்து அவர்கள் பாதுகாக்கப்பட்டிருக்கின்றனர். இந்தியாவில் 11 மாகாணங்களிருக்கின்றன. பிரிட்டிஷ் பாலுசிஸ்தானத்தையும் சேர்த்துக்கொண்டால் மொத்தம் 5 மாகாணங்களில் முஸ்லீம்கள் மெஜாரிட்டியாகயிருக்கின்றனர். 7 மாகாணங்களில் மைனாரிட்டியாகயிருந்தால் 5 மாகாணங்களில் மெஜாரிட்டியாகயிருக்கின்றார்கள். எனவே தாங்கள் மைனாரிட்டியாகயிருப்பதாக முஸ்லீம்கள் நினைக்கக் கொஞ்சமும் காரணமில்லை.

ராம்கார் காங்கிரஸ்

## ஸ்ரீ ராஜன் பாபுவின் வரவேற்புரை

### அன்பு அனைத்தையும் பிணைக்கவல்லது

மார்ச் மீ 19-ந்தேதி ராம்காரில் ஆரம்பித்த காங்கிரஸ் மகாசபையில் ஸ்ரீ ராஜன் பாபு தமது வரவேற்புரையில் பீஹார் மாகாணத்தில் காங்கிரஸானது மூன்றாவது முறையாகக்கூடுவது அம்மாகாணத்தின் அதிர்ஷ்டமென்று குறிப்பிட்டு, பீஹாரின் சரித்திரத்தையும் சிறப்பையும் விவரித்து, பௌத்த மதமும் ஜைனமதமும் இந்நாட்டிற்கு செய்த பேருதவியைப் பாராட்டினார். பீஹாரில் பலரிஷிகளிலிருந்து தவம் செய்திருக்கிறார்களென்றும் பாணினியின் வியாகரண சாத்திரங்கள் பாடலீபுரத்தில் தான் பரீட்டைக்குட்படுத்தப் பட்டனவென்றும் பூமிதான் சூரியனைச் சுற்றுகின்றதே தவிர சூரியன் பூமியைச் சுற்றவில்லையென்ற உண்மையை காலிலியோவுக்கும் 1000 ஆண்டுகளுக்கு முன் ஆர்யபட்டர் இம்மாகாணத்தில் தான் கண்டுபிடித்தார் என்றும் குறிப்பிட்டார்.

#### அன்பின் வலிமை

உலகில் கடும் போராட்டம் நடந்து ரத்தக் களறி ஏற்பட்டுவரும் இந்த நிலையில் ஒரிஸாவை ஜெயித்து யுத்தத்தில் மாண்ட பலருக்கு அனுதாபம் கொண்டு அசோகர் எப்படி வாளைத் துறந்துவிட்டு, அன்பு எனும் பந்தத்தினால் சாம்ராஜ்யத்தைப் பிணைக்கத் தமது புத்திரரையும் பெண்ணையும் வெளியே பிரசாரத்துக்கு அனுப்பினாரோ அதேமாதிரி இச்சமயமும் எவராவது ஒருவர் கிளம்பி யுத்தத்தைத் தடுத்து அன்பையும் சாந்தியையும் நிலைநாட்ட மாட்டாரா? அசோகர் வாள் வலிமையால் ஸ்தாபித்த சாம்ராஜ்யம் 2000 ஆண்டுகளுக்கு முன்பே மறைந்துபோய் விட்டது. ஆனால் அன்பு என்ற பாசத்தால் அவர் சேர்த்தது இன்னும் நீடித்து வருகிறது. சத்யாகிரகத்தின் முதல் பாடத்தை இங்கிருந்துதான் மகாத்மாஜி நமக்குக் கற்பித்தார்.

ஜனநாயக அமைப்பில் திட்டமான வேலை முறையில் நல்ல அபிப்பிராயமுடையவர் மெஜாரிட்டி, மைனாரிட்டி என்ற பொய்யான பிரச்னைகளில் நாட்டங் கொள்ளமாட்டார்கள். இம்மாதிரியான பயங்களுக்கெல்லாம் காரணம், பிரிட்டிஷ் ராஜதந்திரி அயர்லாந்து பற்றிக் குறிப்பிட்டதைப் போல, நாம் நீந்த வேண்டுமென்ற விருப்பத்துடன் ஆற்றங் கரையில் நிற்கிறோம்; தைரியமாக இறங்கவேண்டுவதே இதற்குப் பரிகாரம்.

இப்பிரச்னையை நான் பரிசீலனை செய்ய ஆரம்பித்து 30 வருஷங்களாகின்றன. நான் ஒரு முஸ்லீம். அதில் நான் பெருமையடைகிறேன். இஸ்லாத்தின் 1300 வருஷ உன்னதக் கோட்பாடுகள்தான் எனது பிதிர்ராஜ்யச்சொத்து. நான் ஒரு இந்தியனாகப் பிறந்ததிலும் பெருமையடைகிறேன். பிரிக்கமுடியாத இந்தியஜாதியில் நான் ஒருவன். இந்தியாவில் ஹிந்து மதத்திற்குள்ள பாத்தியம் இஸ்லாத்திற்கும் ஏற்பட்டு விட்டது. இந்தியக் கிறிஸ்துவர்களும், தாங்கள் இந்தியன் என்று சொல்லிக்கொண்டு கிறிஸ்துவை பின்பற்றலாம். ஆயிர வருஷப் பொது வாழ்வானது நம்மை ஒரு ஜாதியாக்கி யிருக்கிறது. இயற்கையாக ஏற்பட்ட இதற்கு ஆண்டவன் முத்திரை வைத்து விட்டார். கடைசியாக ஒற்றுமை, கட்டுப்பாடு, மகாத்மாவின் தலைமையில் நம்பிக்கை இவற்றின் மூலமாகவே நாம் வெற்றி பெறக்கூடும். நமது இயக்கத்தின் பூர்வபெருமைக்கு அவரது தலைமையே காரணம். எதிர்காலத்திலும் அப்படியே.

#### மகாத்மா காட்டும் வழி

இம்மாகாணத்தவர் காந்திஜியை கண்மூடித் தனமாகப் பின்பற்றுகின்றனர் என்று சிலர் குறைகூறுகின்றனர். சமீபகாலத்தில் அவர்தான் நம் நாட்டினர் கண்களைத் திறந்துவைத்தார். ஆகவே அவர் காட்டிய வழியைப் பின்பற்றுவதில் நமக்குப் பெருமைதான். இவ்வாறு செய்யக் கடவுள் நமக்குத் திடத்தை அளிக்கும்படி பிரார்த்திப்போமாக. இவர் "பழைய கதைகளைத்தான் சொல்லுகிறார். நமக்கு அவை வேண்டாம், நாம் புரட்சி மனோபாவத்துடன் தலைகீழாக்கவேண்டும். இப்பொழுது இவர் வேண்டாதவற்றைக் கூறுகிறார்" என்று நீங்கள் சொல்லலாம். இவ்விஷயங்களைப்பற்றி சரியாகப் பேச தலைவர் எல்லாவற்றிலும் அருகர் என்றுமட்டும் கூறுகிறேன்.

#### புத்தர் போதித்த உண்மை

உஜ்ஜிக் குடியரசை ஜெயிக்க விரும்பிய அஜாத் சத்ரு என்ற அரசருக்கு ஸ்ரீ புத்தர் பதில் கூறியிருப்பது நாம் கவனிக்கத்தக்கதாகும்.

"உஜ்ஜிகளது சபைகள் அடிக்கடி கூடுவதாலும் அவைகளுக்கு அநேகர் வருவதாலும் அவர்களுக்கு நன்மை தவிர கெடுதல் இல்லை" என புத்தர் தெரிவித்தார். பின்பு இதேமாதிரி ஏழு கேள்விகள் கேட்க திருப்திகரமான பதில் கேட்டவுடன் அவர் கூறியதாவது:

"எவ்வளவு காலம் உஜ்ஜிகள் ஒன்றுகக்கூடி நன்றாகதேசியக்கடமைகளைச் செய்கின்றாரோ, எவ்வளவு காலம் அதிகாரப் பிரயோகம் செய்யாமல் சட்டம்செய்து அவற்றின்படி நடக்கின்றனரோ, எவ்வளவு காலம் அவர்கள் தங்கள் சட்டப்படி ஒற்றுமையாக நடக்கின்றனரோ, எவ்வளவு காலம் அவர்கள் ஸ்திரீகளிடம் கடுமையாக நடக்காமலிருக்கின்றனரோ, எவ்வளவு காலம் அவர்கள் தங்களது புண்யக்ஷேத்திரங்களில் வழிப்பட்டு அவைகளது சொத்துக்களைப் பறிக்காமல் இருக்கின்றனரோ, எவ்வளவு காலம் அவர்கள் அருகர்களுக்கு இடம் அளிக்கின்றனரோ, அவ்வளவு காலம் அவர்கள் நன்கு அபிவிருத்தியடைவார்கள். அவர்களுக்கு ஒருவித ஆபத்தும் நேரிடாது" இதைக்கேட்டதும் உஜ்ஜிகளை சேனை பலத்தாலும் ஜயிக்கமுடியாது என்பது அஜாதசத்ருவுக்குத் தெரிந்து விட்டது.

#### பலம் பெருக வழி

எந்த சமூகத்திலும் அபிப்பிராய பேதம் இருந்தே தீரும். காங்கிரஸில் நாம் எல்லோரும் ஒன்றாகக் கூடி ஒரு மனிதர் போல் தேசிய கடமையைச் செய்கிறோம் என்று கூற முடியுமா? நாம் செய்த விதிகளை நாம் மீறவில்லை என்றாவது நாம் கூற முடியுமா? நாம் நமது பெரியோர்களை மதித்து உசிதப்படி அவர்களது ஆலோசனைகளைப் பின்பற்றுகிறோம் என்று கூறமுடியுமா? இவைகளுக்கு "ஆம்" என்ற பதில் நாம் கொடுக்க முடியுமானால் நமது பலமும் பெருகும். இப்போது நாம் பெரிய நெருக்கடியான நிலைமையில் இருக்கிறோம். இதற்கு நாம் தயாராகவேண்டும்.

#### ஒரு வேண்டுகோள்

உங்களை நான் கடைசியாகக் கேட்டுக்கொள்ளவேண்டியது ஒன்றுதான். இப்போது நாம்சரியானவழியைப்பின்பற்றினால் நமக்கு வெற்றி. தப்புசெய்தால் நமக்கு எதிர் காலத்தில் அனர்த்தம் தான். காங்கிரஸ்தான் தேசிய ஸ்தாபனம். தேச விடுதலையில் அது தான்சிரத்தை கொண்டிருக்கிறது. இந்த விஷயத்தில் நம்மில் ஒவ்வொருவரும் அவரவர் பொறுப்பை உணர்ந்து நடக்க வேண்டும். அசட்டுத்தனத்தாலே சோம்பேரித்தனத்தாலோ நாம் இப்பெரிய காரியத்திற்கு ஹானி செய்யக்கூடாது. அவசரப்பட்டு தப்பான காரியம் செய்தும் இந்த ஸ்தாபனத்தை நாம் கெடுக்கக்கூடாது. காங்கிரஸ் தலைவரோ அல்லது மகாத்மாஜியோ அல்லது இதர தலைவர்களோ இந்தியாவின் சுதந்திர இயக்கத்தை நடத்தும் கடமையைத் தாங்கவேண்டும் என்ற பிசகான நோக்கத்தையும் நாம் ஆதரிக்காமல் இருக்கலாம். ஆனால் ஒவ்வொருவரும் தமக்குத் தாமே தாம் இந்தப் பெரிய விஷயத்தில் என்ன செய்யப் போகிறோம் என்பதை தீர்மானித்துக் கொள்ள வேண்டும். அவர் அவசிய மேற்படின் சேவையிலும் தியாகத்திலும் மட்டுமே பங்கு கொள்ளாமல் எதிர்கால திட்டத்தை நிர்ணயிப்பதிலும் பங்குகொள்ள வேண்டும். நமது சக்திக்கேற்றபடி நாம் முன்வர வேண்டும். தீர்மானம் செய்யப்பட்டவுடன் நாம் எதற்கும் சித்தமாக இருப்பதுடன் அதை நிறைவேற்றுவதில் பூரா திடத்தையும் காட்ட வேண்டும்.

---

### சினமங்கலம்

---

17—3—40 இரவு 8 மணிக்கு இவ்வூர் அ. சு. வாலிபர் சங்கத்தின சார்பில் போர்டு பாடசாலை மாணவர்களால் "அபிமன்பு" என்ற நாடகம் நடத்திக் காண்பிக்கப்பெற்றது.

---

"ஹரிஜன்" கட்டுரை

# மகாத்மாவின் மனமாற்றம்

## வெஸ்ட் மின்ஸ்டர் டொமினியன் அந்தஸ்துகூட இந்தியாவுக்குப் பொருந்தாது

'மிகவும் பொறுப்பு வாய்ந்த ஒரு இங்கிலீஷ்காரர், ஒரு பொது நண்பருக்கு' எழுதிய கடிதத்துக்கு காந்திஜி மார்ச் மீ 16-ந் தேதி ஹரிஜன் பத்திரிகையில் பதிலெழுதியிருக்கிறார். அதன் விவரம் பின்வருமாறு:

'டொமினியன் அந்தஸ்திலிருந்து, பாட்னாவில், திடீரென்று, பூர்ண சுதந்திரத்திற்கு மாறிவிட்டீர்களே? நாங்கள் மூட்டை முடிச்சுகளுடன் போய்விடவேண்டுமென்று அத்தீர்மானம் கூறுகிறது. அப்படியானால் எங்களிடமிருந்து ஒருவிதமான உதவியும் பெறாமல், உண்மையாகவே நீங்கள் இந்தியாவை ஆளமுடியுமாவென்று கேட்கிறேன். வெள்ளைக்காரர்கள் போனவுடன் இந்தியாவின் செலவில் தாங்கள் ஜோராக அனுபவிக்கலாமென்று எல்லைப்புறத்தில்நான் பார்த்த சில கனவான்கள் சொன்னார்கள். அஹிம்ஸையைத் துச்சமாக மதிப்பவர்கள் விஷயத்தில் அஹிம்ஸாக் கொள்கை பலனளிக்காது. ஆகையால் இந்தியாவை தன்னம்பிக்கையுடன் உறுதியாக நிறுத்தும் வரையில், பிரிட்டிஷ்காரர் இந்தியாவை விட்டு போவது நியாயமாகாது. இந்த சந்தர்ப்பத்தில் இந்தியா, பிரிட்டனின் யுத்த முயற்சிகளை தடை செய்தால் ஆங்கிலேயர்கள் ஆத்திரமடையக் கூடும்" என்று அந்த நண்பர் எழுதியிருந்தார்.

### மகாத்மாவின் பதில்

காந்திஜி பின்வருமாறு பதில் எழுதியிருக்கிறார்:

"இந்தியாவின் மனோபாவம் இவருக்குக் கொஞ்சங்கூட தெரியாது என்பதை இக்கடிதம் நன்றாக எடுத்துக் காட்டுகிறது. 1929 முதல் பூர்ணசுதந்திரம்தான் காங்கிரஸின் லக்ஷியமாயிருந்து வந்திருக்கிறது. பொறுப்புவாய்ந்த ஆங்கிலேயர்கள் காங்கிரஸிலுள்ள இடதுசாரிகளையும் வலது சாரிகளையும் சந்திக்க வேண்டும். அப்படி சந்தித்தால் எல்லா தப்பெண்ணங்களும் நீங்கிவிடுமென்று நான் உறுதிகூறுகிறேன். பாட்னா தீர்மானத்தைப் பற்றி தப்பெண்ணம் கொண்டிருக்கிறார்கள். முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு அரசியல் நிர்ணயசபையின் முடிவுகளை அமுலுக்குக்கொண்டு வருவோமென பிரிட்டன் அறிவிக்கவேண்டுமென்று காங்கிரஸ் கேட்கிறது. அந்த சபையில் காங்கிரஸ் தானிருக்குமென்று அர்த்தமில்லை.

அச்சபை போதிய அளவு வோட்டுகள் பெறக்கூடிய எல்லாக் கட்சிகளின் பிரதிநிதிகளையும் கொண்டதாயிருக்கும். எனவே சிறு பான்மை வகுப்புகள் அனைத்தும் அதில் பூர்ண பிரதிநிதித்துவம் பெறும்.

அறிவுமிகுந்த ஆங்கிலேயர்கூட இந்தியாவின் பாத்தியதையை அறியாமலிருப்பது மிகவும் பரிதபிக்கத்தக்கதாகும். அவர்கள் தங்கள் சொந்த விஷயங்களில் பரமதிருப்தியடைந்திருப்பதால் இந்தியப் பிரச்னைகளைப் பற்றி அறிந்துகொள்ள சிரமப்படுவதில்லை. அவர்கள் தேசியப் பத்திரிகைகளைப் படிக்கமாட்டார்கள். ஆங்கிலோ-இந்தியப் பத்திரிகைகளைப் படித்துவிட்டே அவர்கள் சில முடிவுக்கு வருவர். அந்தப் பத்திரிகைகளுக்கு தேசிய இந்தியாவின் எண்ணங்களும் அபிலாஷைகளும் செய்கைகளும் இன்னதெனத்தெரியாது. ஆரம்பத்திலிருந்தே காங்கிரசைப் பற்றித் தவறான கருத்துக்களே பரப்பப்பட்டு வந்திருக்கின்றன.

### ஆங்கிலேயர் போய்விட்டால்

உள்நாட்டுக் கலகத்தையோ வெளிநாட்டு ஆக்கிரமிப்பையோ, இந்தியா சமாளிக்கமுடியாது என்று இங்கிலீஷ்காரர்கள் உண்மையாக நம்புகிறார்கள். இந்தியா விஷயத்தில் கௌரவமான ஒரு சமரசம் ஏற்படுத்துவதற்கு உள்ள பெரியதடைகளில் இது ஒன்று. இந்த பயம் நியாயமானதாயிருந்தால் இந்தியாவை சுதந்திர நாடாக்கிவிடுங்கள். தானாக இந்தியா புத்திசாலித்தனத்தையும் தற்காப்பு முறையையும் கற்றுக்கொள்ளட்டுமென்று விட்டு விடுங்கள். அது ஒன்று தான் பரிகாரம். நிர்க்கதியான இவ்வளவு பெரிய ஒரு தேசம், தனக்கும் உலகத்துக்கும், ஒருபெரும் சுமையாயிருப்பதைவிட, தனக்குரிய அந்தஸ்தைப் பெறுவதற்கு, அது பெரிய அபாயங்களுக்குள்ளாவது, இந்தியா, பிரிட்டன், உலகம் ஆகிய எல்லாவற்றுக்குமே நல்லது.

ஆங்கிலேயர் மூட்டை முடிச்சுகளுடன் போய்விட்டால் இந்தியாவின் கதி என்னவாகுமோவென்று எண்ணி நிருபர் நடுங்குகிறார். அஹிம்சாப் போராட்டத்தில் அத்தகைய நிலைமை ஒருநாளும் ஏற்படுவதில்லை. அஹிம்ஸாப் போராட்டத்தின் முடிவில் சிநேக பூர்வமான சமரஸமே ஏற்படும். ஆங்கில ராணுவத்தைப்பற்றி மட்டும் அவர் பிரஸ்தாபித்திருந்தால் அதிகச்செலவு காரணமாகவோ அல்லது வேறுகாரணங்களை முன்னிட்டோ சுயேச்சை இந்தியாவில் சேவை செய்யவில்லையென்றால் நிச்சயமாக போயே தீருவர். அவர்களுக்குத் தேவையில்லா விடிலும் அவர்கள் போய்விடுவர்.

### காங்கிரஸின் நிலைமை

காங்கிரஸின் நிலைமை என்ன என்பதை காரியக்கமிட்டித் தீர்மானம் தெளிவாக்குகிறது. வெஸ்ட் மின்ஸ்டர் ரகத்தைச் சேர்ந்த டொமினியின் அந்தஸ்து கூட இந்தியாவுக்குப் பொருந்தாது. பிரிட்டினிலிருந்து பிரிந்து போகும் உரிமையுடன் டொமினியன் அந்தஸ்து அளிக்கப்பட்டால் அதை நான் ஒப்புக்கொள்ளுவேன் என்று 1937-ல் ஸ்ரீ எச். எஸ். எல் போல்கருக்கு நான் எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருந்தேன். அந்த நிலைமைக்கு மற்ற யாரையும் கட்டுப்படுத்த எனக்கு அதிகாரம் இல்லை. அம்மாதிரியொன்றும் அளிக்கப்படவில்லையென்பதைச் சொல்லத்தேவையில்லை. என்னைப்பற்றி என்ன தான் சொன்ன போதிலும் காங்கிரஸ் தன்கொள்கையை மாற்றிக்கொண்டு விட்டதென்று குற்றம் சொல்லமுடியாது.

என் சம்பந்தப்பட்ட வரையில் நான் மாறிவிட்டேன். அதற்குப் பிறகு கிடைத்துள்ள அநுபவத்திலிருந்தும், தீர்க்காலோசனையிலிருந்தும் வெஸ்ட் மின்ஸ்டர் ரகத்தைச் சேர்ந்த டொமினியன் அந்தஸ்துகூட இந்தியாவுக்கு பொருந்தாது என்ற முடிவுக்கு வந்திருக்கிறேன்.

சட்டமறுப்பு ஆரம்பித்தால் அது நசுக்கப்படும் என்றும் அவர் குறித்துக் காட்டுவதாகத் தெரிகிறது. ஆனால் சட்ட மறுப்பு இயக்கத்திலேயே அதற்கு இடமில்லை. பலாத்காரம் இடையில் புகுந்தால், அது நசுக்கப்படுவது நிச்சயம். பலாத்காரமிருந்தால் அவமதிப்பு அடையவேண்டியதுதான். முன்னதாக இப்போது ஒரு ஏற்பாடும் செய்யவில்லை. பொது ஜனங்களுக்கே ஒரு கலக்கம் ஏற்படும். என்ன செய்வதெனத் தெரியாமல் விழிப்பார்கள். ஆனால் நான் முன்னேற்பாடுகள் யாவும் செய்தும் துவேஷம் ஏற்படுமானால் அதையும் சமாளிக்க வேண்டியதே. ஆண்டவன் சன்னிதியில் ஒருவர் அவரது காரியத்தை கொண்டு மதிக்கப்படமாட்டார். அவரது எண்ணத்தைக்கொண்டே மதிக்கப்படுவர். நமது உள்ளத்தில் என்னவிருக்கிறது என்பது அந்த இறைவனுக்குத் தான் தெரியும். சுதந்திரத்துக்குப் போராடுவது சுலபமல்ல. ஒருவர் இன்னொருவரின் உடலில் புகுந்து வாழ விரும்பாததுபோல் ஒரு தேசத்தின் ஆதிக்கத்துக்கு வேறொரு தேசம் உட்பட்டு இருக்க விரும்பவில்லை. ஆங்கிலேயர்கள் தங்கள் சுதந்திரத்தை நிலைநிறுத்த எவ்வளவோ தியாகங்கள் செய்கிறார்கள். அவர்கள் இந்த சமயத்தில் இந்தியாவின் கஷ்டத்தைக் கவனியாமலிருக்கக்கூடாது.

### காங்கிரஸ் செய்வதென்ன?

"நாங்கள் வேண்டிய அனைத்தையும் எங்களிடம் கொடுங்கள் எனக் காங்கிரசு கேட்கவில்லை. இந்நாட்டின் கதிமோக்ஷத்தை இந் நாட்டுப் பிரதிநிதிகளே நிர்ணயிக்க வேண்டுமேயொழிய நீங்கள் நிர்ணயிக்கக்கூடாது" என்றே காங்கிரஸ் கேட்கிறது. இந்த நியாயமான கோரிக்கையும் மறுப்பதானால் காங்கிரஸ் என்ன செய்வது?

---

### காங்கிரஸ் வெற்றி

---

செங்கற்பட்டு ஜில்லா பொதுத் தொகுதி பிரதிநிதியாகச் சென்னை ராஜாங்கசபைக்கு ஸ்ரீ ஸி. என். முத்துரங்கமுதலியார் எம். எல். ஏ. (ஸெண்டிரல்) தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். அவர் 251 வோட்டுகள் கிடைத்து வெற்றிபெற்றார். போட்டியிட்டதிவான் பகதூர் ஸ்ரீ கே. தெய்வசிகாமணி முதலியார் தோற்கடிக்கப்பட்டார்.

---

காங்கிரஸ் விஷயாலோசனைக் கமிட்டி

# ராம்காரில் ராஜன் பாபு பிரசங்கம்

## பண்டித ஜவஹர் கேள்வி?

★

ராம்காரில் மார்ச் மீ 17-ந் தேதி காங்கிரஸ் விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டம் ஆரம்பிக்கப்பட்டது. டாக்டர் ராஜன் பாபு தலைமை வகித்தார். அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் விஷயாலோசனைக் கமிட்டியாக மாறுமுன் பண்டித ஜவஹர் காரியக்கமிட்டி சார்பாக தலைவர் பதவியிலிருந்து ஸ்ரீ ராஜன் பாபு, செய்த ஊழியங்களைப் பாராட்டி அவருக்கு வாழ்த்துக் கூறுவதாக ஒரு பிரேரணை கொண்டுவந்தார். தீர்மானம் நிறைவேறியது. பிறகு ராஜன் பாபு மௌலானா அஸாதுக்கு மாலை சூட்டித் தலைவர் பதவியை ஏற்றுக் கொள்ளும்படி கேட்டுக்கொண்டார். ஸ்ரீ அஸாத் நன்றிகூறி பின்வருமாறு சில வார்த்தைகள் கூறினார்:-

என் கடமையை மதித்தே நான் இப்பொறுப்பை ஏற்றுக்கொண்டேன். இப்பொறுப்பை வகிக்க எனக்குப் போதிய ஆற்றல் இல்லாமலிருக்கலாம். ஆனால் என் கடமையை நிறைவேற்ற நான் உறுதிகொண்டிருக்கிறேன். உங்களின் பூர்ண ஒத்துழைப்பை நான் எதிர்பார்க்கிறேன். காங்கிரஸில் கொண்டுவரக்கூடிய தீர்மானத்தைப் பிரதிநிதிகள் நன்கு படித்து விஷயங்களை அறிய வேண்டுவதற்காக முன்னதாகவே அத் தீர்மானத்தை வெளியிடுவது நலமெனக் கருதி பாட்னாவில் காரியக்கமிட்டி அத் தீர்மானத்தைத் தயாரித்து வெளியிட்டிருக்கிறது. தற்கால ராஜீய நெருக்கடியைப் பற்றி பிரஸ்தாபிக்கும் இந்தத் தீர்மானம் பொருத்தமாக அமைக்கப்பட்டு உங்களுடைய அங்கீகாரத்திற்கு வந்திருக்கிறது. ஸ்ரீ ராஜன் பாபு பின் கண்ட தீர்மானத்தைப் பிரரேபித்தார்.

### தீர்மான விவரம்

ஐரோப்பாவில் யுத்தம் சம்பவித்திருப்பதால் ஏற்பட்டுள்ள நெருக்கடியான நிலையையனுசரித்தும், அது சம்பந்தமாகப் பிரிட்டிஷாருக்குள்ள கொள்கையைக் கருதியும், இதுவரைக் காரியக் கமிட்டியும் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியும், நிறைவேற்றிய தீர்மானங்களையும் யுத்த நிலையைப்பற்றி எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளையும் இக் காங்கிரஸ் அங்கீகரிக்கிறது.

ஸ்ரீ ராஜன் பாபு

இந்திய மஹா ஜனங்களைக் கலக்காமலே இந்தியா யுத்தத்தில் ஈடுபட்ட நாடாகப் பிரிட்டன் கருதுவதும் இந்த யுத்தத்தில் இந்தியாவின் செல்வாக்கை உபயோகிப்பதும் சரியல்ல. சுயமரியாதையுணர்ச்சியும்சுதந்திர எண்ணமுமுடைய எவரும் இவ்வித நிலையைச் சகிக்கமாட்டார்கள். இந்தியா விஷயமாகப் பிரிட்டிஷாரின் மனோபாவமின்னதென சமீபத்தில் வெளியிட்ட அறிக்கைகளைக் கவனித்தால் பிரிட்டன், தனது ஏகாதிபத்தியத்தைப் பெருக்கிக்கொள்ளவே இந்த யுத்தத்தை நடத்திவருவதாகத் தெரிகிறது. அந்த ஏகாதிபத்யம் இந்திய மக்களின் செல்வ நிலையை சுரண்டி வருகிறது. ஆகையால் காங்கிரஸ் எவ்விதத்திலும் நேர்முகமாகவோ மறைமுகமாகவோ யுத்தத்தில் சம்பந்தப்பட முடியாது. இந்தியத் துருப்புகள் பிரிட்டன் சார்பாகப் போராடுவதையும் காங்கிரஸ் அங்கீகரிக்கவில்லை. யுத்தத்திற்காக இந்தியாவிலிருந்து ஆளும், பணமும் போவதையும் காங்கிரஸ் பலமாக ஆக்ஷேபிக்கிறது.

பூரண சுதந்திரத்திற்குக் குறைந்த எதையும் இந்தியமக்கள் ஏற்றுக் கொள்ள முடியாதென காங்கிரஸ் அறிவிக்கிறது. காங்கிரஸ் எப்பொழுதும் போல் இப்பொழுதும் வகுப்பு சமரசம் ஏற்படுத்த தன்னாலான முயற்சிகளைச்செய்யத் தயாராயிருந்தபோதிலும், ஒரு அரசியல் நிர்ணய சபையின் மூலமே அதற்கு நிரந்தரமான பரிகாரம் ஏற்படக் கூடுமெனக் கருதுகிறது.

இந்தியச் சுயேச்சைக்குக் குறுக்கே நிற்க சமஸ்தானாதிபதிகளுக்கோ அல்லது விசேஷ பாத்தியதைகளைக் கொண்டாடும் வெளிநாட்டவருக்கோ உரிமையிருப்பதாகக் கூறப்படுவதைக் காங்கிரஸ் எதிர்க்கிறது. இந்தியாவின் அரசுரிமை இந்திய ஜனங்களுக்கே யிருக்கவேண்டும். அவர்கள் மாகாணங்களில் வசிப்பவர்களானாலும் சரி, சமஸ்தானப் பிரஜைகளாயினும் சரி, யுத்தத்தில் கலக்காமலிருப்பதற்காகவும் அன்னிய ஆதிக்கத்திலிருந்து இந்தியாவை விடுவிக்க வேண்டுமென்ற காங்கிரஸின் உறுதியை வற்புறுத்துவதற்காகவும் காங்கிரஸ் மந்திரி சபைகள் ராஜினாமா செய்தன. அடுத்த படியாக சட்டமறுப்பு. இதற்குக் காங்கிரஸ் தயாராயிருப்பதாகக் கருதப்பட்டவுடனேயே சட்டமறுப்பில் காங்கிரஸ் இறங்கிவிடும்; அல்லது நெருக்கடி ஏற்பட்டால் முன்னதாகவும் ஆரம்பிக்கப்படும்.

உடனேயே சுயேச்சை அளிக்க வேண்டுமென்று காரியக்கமிட்டி பிரிட்டனைக் கேட்கவில்லை. யுத்தம் முடிந்தவுடன் சுயேச்சை அளிக்க வேண்டுமென்று உறுதி கூறும்படி மட்டிலும்தான் காரியக்கமிட்டி கேட்டது. இதற்கிடையில் அனுஷ்டானத்தில் எல்லாம் இந்தியா சுயேச்சையுள்ளதாகவும், யுத்தவிஷயத்தில் தனது பாகத்தை நிர்ணயித்துக் கொள்ளும் சுதந்திரமுள்ளதாகவும் இருக்குமாறு செய்துகொடுக்க வேண்டுமென்று காங்கிரஸ் கோரியது. இது சம்பந்தமாக பிரிட்டன் வெளியிட்ட அறிக்கைகளில் சுயேச்சை, ஜனநாயகம் இரண்டையும் பாதுகாக்க வேண்டுமென்று பிரிட்டனின் நோக்கங்கள் ஐரோப்பாவுக்கு மட்டிலுமேதான் என்பதும் அவை இந்தியாவுக்குப் பொருந்தாது என்பதும் ஆகும். நாம் பிரிட்டிஷாரைப்போலவே சுயேச்சையுடனிருக்க விரும்புகிறோம். ஆனால் நாம் முன்னேற்றமடைவதால் பிறர் வீழ்ந்து விடுவார்களேயானால் அதற்கு நாம் என்ன செய்யவிருக்கிறது. (கரகோஷம்) சுய நிர்ணயத்துக்கு நமக்கு உரிமையுண்டு என்பதைப் பிரிட்டன் அங்கீகரிக்குமானால் வித்தியாசங்களெல்லாம் மறைந்துவிடும். பிரிட்டன் இருந்து அதிகாரம் செலுத்தும் வரையில் இவ்வித்தியாசங்கள் தொடர்ந்து இருந்தேவரும்.

தற்போதுள்ள நிலைமையில் ஒரேவொரு வழிதானிருக்கிறது. அது தான் சத்யாக்கிரகம். பரிபூரணமான அஹிம்சா தர்மத்தைக் கைக்கொள்ளவேண்டியது மிகவும் அவசியமென வற்புறுத்துகிறேன்.

ஸ்ரீ ஜவஹர்

பண்டித ஜவஹர் தீர்மானத்தை ஆமோதித்துப் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

அரசியல் நிர்ணய சபையைப்பற்றி பிரமாதமாக விவாதம் நடந்திருக்கிறது. கூட்டத்தின் முன்புள்ள தீர்மானம் மிகத் தெளிவானதாகும். எத்தகைய அரசியல் நிர்ணயசபைக் கூட்டப்பட்டாலும் சரி, அதில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்குத் துளிகூட சம்பந்தமிருக்கக்கூடாது. வெஸ்ட்மினிஸ்டர் சட்டத்துக் கொப்பான குடியேற்ற நாட்டந்தஸ்துக் கூட இந்தியா சம்பந்தப்பட்டமட்டில் அறுபவசாத்தியமானதல்ல. சிநேகபூர்வமாக இந்தியா பிரிட்டனுடன் சம்பந்தம் வைத்துக்கொள்வதில் எனக்கு ஆட்சேபனையில்லை. ஆனால் சிநேகபூர்வமான சம்பந்தம் சமத்துவத்தை ஆதாரமாகக்கொண்டதாய் இருக்க வேண்டுமேயொழிய ஆதிக்கத்தை ஆதாரமாகக்கொண்டிருக்கக் கூடாது.

இந்தியாவில் போராட்டம் ஏற்படுவது நிச்சயம். இப்போராட்டமானது பெருத்த முறையிலேயே நடக்கும். எப்பொழுது ஏற்படும் என்பதை நான் சொல்லமுடியாது. உடனே சட்டமறுப்பை ஆரம்பித்து விடுங்களென்று ஜனங்கள் சொல்லுகிறார்கள். இது எனக்கு ஆச்சர்யத்தையளிக்கிறது. அவர்களுக்குப் போராட்டத்தை ஆரம்பிக்கத்தைரியமிருந்தால் அதில் இறங்காமல் வீண்பேச்சு ஏன் பேசிக்கொண்டிருக்கிறார்கள்? (கரகோஷம்) நாடு பூர்ணமாகத் தயாரானதற்குப் பின்னரே நாம் போராட்டத்திலிறங்க வேண்டும். இல்லாவிட்டால் அவசரப்பட்டுக் காரியம் செய்ததற்காகப் பின்னால் நாம் வருந்துவோம்.

கடைசியாகப் பண்டிதர், ஸ்ரீ ஜெயப்பிரகாச நாராயணர் கைது செய்யப்பட்டதைப்பற்றி குறிப்பிடுகையில் பிரிட்டனின் உண்மையான மனோபாவத்தை அது காட்டுகிறதென்றார். தீவிரமாகக் கருமம் புரிய காலம் நெருங்கிவிட்டது என்றும் சொன்னார். ராஷ்டிரபதி மௌலானா அஸாத் நிலைமையின் முக்கியத்துவத்துக்கேற்ப விவாதத்தைநடத்துமாறு மெம்பர்களைக் கேட்டுக்கொண்டு, சில்லரை விஷயங்களை மறந்து பெரிய பிரச்னைகளில் கவனம் செலுத்த வேண்டுமென்றும் வெட்டிப் பேச்சுக்கு இது சமயமல்லவென்றும் கேட்டுக்கொண்டார்.

---

### வைஸ்ராயின் நல்லெண்ணம்

---

மார்ச் மீ 15-ந் தேதி கபூர்த்தலா சமஸ்தானவிருந்தில் வைஸ்ராய் லார்ட் லின்லித்கோ பேசுகையில் இந்திய அரசியல் பிரச்னையைப்பற்றிப் பிரஸ்தாபித்துப் பின்வருமாறு கூறினார்:

இந்தியாவின் ஒற்றுமைக் கேற்பவும், எல்லோருடைய நியாயமான உரிமை நலன்களுக் கேற்பவும், இந்தியாவின் சரித்திரப் பெருமைக்கேற்பவும், இம்மகத்தான நாட்டின் தகுதிக்கேற்பவும், அரசியல் பிரச்னைகளைத் தீர்க்கவேண்டுமென்பதில் பிரிட்டிஷ் ஸர்க்கார் கொண்டிருக்கும் கவலையை நான் வற்புறுத்தவேண்டிய அவசியமில்லை. எங்களுடைய முயற்சிகள் இதுவரை வெற்றிபெறவில்லையென்றால் அதற்கு எங்களுடைய முயற்சிக்குறைவோ அல்லது நாங்கள் நல்லெண்ணம் காட்டவில்லையென்பதோ காரணமல்ல. எங்களுடைய விருப்பம் நிறைவேறாமல் செய்திருக்கும் முட்டுக்கட்டைகளை அகற்றுவதில் என்னைவிட அதிக சிரத்தையுடையவர் வேறொருவருமில்லை.

---

### வீர பத்னி

ராம்கார் காங்கிரஸில் பெண் தொண்டர்படைத் தலைவி ஸ்ரீமதி பிரபாவதி தேவி. (G. O. C) ஸ்ரீ ஜயப்பிரகாச நாராயணரின் பத்தினியார். ஸ்ரீ ஜெயபிரகாசர் கைதியானார் என்ற செய்தி அந்த அம்மணியிடம் அறிவிக்கப்பட்டபோது அவர் மனங் கலங்கவில்லை. புன்முறுவலோடு அந்தச் செய்தியை அவர் கேட்டது அருகிலிருந்தோர் உள்ளத்தை உருக்கியது.

"எனது கணவர் கைதியாகும் செய்தி கேட்க நான் எப்போதும் தயாராய்த்தானிருக்கிறேன். நமது பாரத நாட்டிலே தேச பக்தி என்பது ஒரு பெரிய குற்றம் அல்லவா" என்றும் அவர் கூறினார்.

# ஊழியன்

பொங்குபுகழ்ப் பாரதத்தாய் பொருந்தமணி முடிபுனைந்து புலவர் போற்றச்
சிங்கஅணை மீதிருந்து தனியரசு செலுத்தியுயர் செங்கோல் தாங்கி
எங்குமொளி வீசஅறம் யாவுநனி வளர்ந்தோங்க இடொன் றில்லா
எங்கள்தமிழ் இனியநறும் மணம்மலர ஊழியமே ஏற்றிட் டேஞல்

பிரமாதி-ஸூ பங்குனி-மீ 8உ (21—3—40) வியாழன்

## ராம்கார்! ராம்கார்!!

இந்த வாரம் எங்குபார்த்தாலும் ராம்கார்! ராம்கார்!! என்ற பேச்சே. இந்தப் பெரிய நாட்டின் எந்த மூலை முடுக்குகளை நோக்கினும் ராம்கார் ஒலியே முழங்கிக்கொண்டிருக்கும். இந்தியாவின் ஜீவநாடி இன்று ராம்காரிலன்றோ இருக்கின்றது. தேசத் தின் தலைவர்கள் அனைவரும் இன்று ராம்காரில் திரண்டு நிற் கின்றார். ஆண்டுதோறும் ஒவ்வோரிடத்தில் குழுமவே செய் கின்றார். இவ்வாண்டு ராம்கார் என்னும் ஊரில். எல்லா ஆண் டினும் நிகழும் நிலைமையன்று ராம்கார் நிலைமை! ஆள்வோரு டன் நேருக்கு நேர் நின்று அறப்போர் தொடுக்க எப்பொ ழுது முரசுகொட்டுவது என்று ஆராயும் நிலைமை அருமையா கச் சில காங்கிரசுக்கே வாய்க்கும். அவ்வாய்ப்பு ஒன்றே ராம் கார் காங்கிரசுக்கு உயிராக இலங்கி நிற்கின்றது.

ராம்கார் பீகார் மாகாணத்தில் இருக்கின்றது. பீகாரின் மன்னர்தான் ராம்கார் காங்கிரசின் வரவேற்புத் தலைவர். அவர்தாம், ராம்காரில் ராஷ்ட்ரபதி பீடத்தமர்ந்த மௌலானு அசாத்திடம் தம் தலையிலிருந்த ராஷ்ட்ரபதிக் கிரீடத்தை அளித்த ராஷ்ட்ரபதி. ராம்கார் காங்கிரஸ் செய்த அந்த ஒரு பெரிய தீர்மானத்தை முன்னே ஆக்கிய இடமும் அவர்தம் பீகார் மாகாணத்தின் தலைநகரான பாட்னு நகரமே. அத்தீர் மானத்தைப் பிரேரேபித்து விஷய ஆலோசனைக் கமிட்டியில் விரிவான பெரியதொரு சொற்பெருக்காற்றி விரல் விட்டு எண்ணத்தக்க ஒரு சிலரைத் தவிர எல்லோரையும் ஒப்புக் கொள்ளுமாறு செய்தவரும் அன்னாரே. காந்தியடிகள் ராம் காரில் இறங்கியவுடன் அவர் பாதங்களைத் தொட்டு வணங்கிய பெருமையுடைய பாபு இராஜேந்திரரே அப்பெரியார் என்று சொல்லவும் வேண்டுமோ?

காந்தியடிகளின் கண்களுள் ஒன்று போன்றவரான ராஜேந்திரர் மாகாணத்தில் — ராஜேந்திரர் வரவேற்புத் தலைமையில்—ராஜேந்திரர் தலையில் கல்கத்தா நகரத்தில் வலுவில் சுமத்தப்பட்ட மணிமுடி, மௌலானு தலைக்கு மாற் றப்பட்டது. மௌலானு தலைக்கும் அம்முடி புதிது அன்று. மௌலானு அபுல்கலாம் அசாத் அப்பதவியைத் திறம்பட வகிக்க வல்லவர். அவர், தமது நீண்ட தலைமைப் பிரசங்கத் தில் முக்கியமான பொருள்கள் எல்லாவற்றையும் நன்கு ஆராய்ந்திருக்கின்றார். மௌலானு அசாத்தும் ராஜேந்திர ரைப் போலவே காந்தியடிகள் வழி பற்றி நடப்பவர். கொள் கையில் கொஞ்சமும் மாறுபடாத ஒரே கூட்டத்தைச் சேர்ந் தவர் இவரனைவரும். இவர்களைப் படேல் கூட்டத்தைச் சேர்ந்தவர் எனத் தமிழ்நாட்டில் சிலர் கூறுவர்.

ஆம்! அஃதுண்மையே. படேல் கூட்டம் என்றால் அறிவு, ஆற்றல், அஞ்சாமை, நேர்மை, உண்மை, ஒழுக்கம், கருணை, கடமை முதலிய அனைத்தையும் ஒருங்கே கொண்ட ஓர் குழு என்பது பொருள். படேல் கூட்டம் என்றாலும் காந்தி கூட் டம் என்றாலும் ஒன்றே. காந்திக்கு வலது கை வல்லபாய் படேலே. அக்கூட்டமே ராம்கார் காங்கிரசை ஆட்கொண் டது. ராம்காரில் இந்த வாரம் நடந்த தேசீயத் திருவிழாவுக்கு முக்கிய உறுப்பினர் யார்? படேல் கூட்டத்தார் - அல்லது காந்தி கழகத்தாரேயன்றோ? மற்றவரும் சமரச எதிர்ப்பு மகாநாடு நடத்தினராம்! பாவம்! பெயரைப் பாருங்கள்! சமர சத்திற்கு எதிர்ப்பு! எந்தக் காலத்திலும் எங்கும் சமரசமே கூடாதா என்ன?

ஆதவன் (முன் மின்மினிபோல் ராம்காரில் எட்டமுடி யாத பெரிய காங்கிரஸ் மகாநாட்டிற்கு எதிரில் இத்தகைய திருவிளையாட்டும்கூட. அதிலும் சென்ற ஆண்டில் ராஷ்ட் ரபதியாகவே தெரிந்தெடுக்கப்பெற்ற ஒருவர் ராம்காரில் ஏதோ ஒரு மகாநாட்டில் தலைவராக நேர்ந்ததென்றால் அது விதியென்று சொல்கிறார்களே அதனால்தானே என்னவோ? காங்கிரசின் லட்சியத்தை விளக்கும் நீண்ட தீர்மானம் ராஜன் பாபுவால் கொணரப்பட்டது. அது நேருவால் ஆதரிக்கப்பட் டது. ஏராளமான திருத்தங்களையும் தோற்கடித்துப் பெருமித மாக நிறைவேறியது. அது முடிந்ததும் காந்தியடிகள் அற்புத மான சொற்பெருக்கொன்று நிகழ்த்தினார். ராம்கார் காங்கி ரஸ் மகாசபை கொட்டும் மழையுடன் ஆரம்பமாயது. ராம்கார் முழுதும் காந்தீயமயமாகவே திகழ்ந்தது. ராம்கார் கட்டிய முடிவு காந்தியே தலைவர் என்பது. இதில் ஒன்றும் புதுமை யில்லை. தேசத்தின் ஏகோபித்த பழைய முடிவே இது. இனி நடக்க வேண்டுவன அனைத்தும் காந்தி கையிலேயே இருக்கின் றது. அவர் நா அசைந்தால் நாடு அசையும்.

## இடி முழக்கம்

### ஒரு யுத்தம் நின்றது ஆனால்?

உலகிலேயே மூன்று யுத்தங்கள் நடைபெற்றதில் சமீபத்தில் ஒன்று சமாதானமாக முடிந்து விட்டது. அதாவது—சீன-ஜப்பான் யுத்தம், ஜெர் மனி-பிரிட்டன், பிரான்ஸ் யுத்தம், ருஷ்யா-பின்லந்து யுத்தம்-இவைகளில் கடைசியாகக்குறிப்பிட்டதுராஜியாகத் தீர்ந்துவிட்டது. முதலாவது குறிப் பிட்ட போரைப்பற்றிய செய்திகள் பிரமாதமாகப்பத்திரிகைகளில்அடிபட வில்லை, என்றாலும் யுத்தம் நடக்கத் தான் செய்கிறது. பொதுஜனங்கள் கவனமெல்லாம் இரண்டாவது யுத்தத் தைப் பற்றியே இருந்துவருகிறது. இந்த யுத்தத்தில் எல்லா வல்லரசுகளும் நேர்முகமாகவோ மறைமுகமாகவோ ஈடுபட்டுத் தானிருக்கின்றன. அல்லது ஈடுபட்டுத்தான் ஆகவேண்டும். அமெ ரிக்கா, யுத்தத்தை நிறுத்துவதற்காக தமது தூதரான வெல்லை அனுப்பி வைத்ததாகச் சொல்லப்படுகிறது. சமீ பத்தில் முஸோலினியும் ஹிட்லரும் இரண்டுமணி நேரம் கலந்து பேசினார் களாம். இந்தப் பேச்சைப்பற்றி பல வித ஹேஷ்யங்கள் சொல்லப்படுகின் றன. வெல்ஸிடம் சமர்ப்பித்த சமா தான நிபந்தனைகளை ஹிட்லர்-முஸோ லினி சந்திப்பால் ஊர்ஜிதம் செய்யப் பட்டிருப்பதாக ஓர் செய்தி கூறுகிறது. அதாவது (1) பிரிட்டன் உலகின் பல பாகங்களிலும் வைத்திருக்கும் கடற் படை மூலஸ்தானங்கள் மறைய வேண்டும். (2) கடற்படையில் ஆயுதப் பரிஹாரணமுறை அமுலுக்கு வர வேண்டும் (3) போலந்தும் ஜெக்கும் ஜெர்மனி வசமேயிருக்கவேண்டும். (4) முன் ஜெர்மனிக்குச் சொந்தமான காலனிகளைத் திருப்பிக்கொடுக்க வேண்டும். (5) மத்திய தென்கிழக்கு ஐரோப்பாவில் பிரிட்டிஷாருக்குள்ள செல்வாக்கு எடுபடவேண்டும். இவை தான் ஹிட்லரின் சமாதான நிபந் தனைகள். இதற்கு முஸோலினியின் சந்திப்பு உதவியாயிருக்குமென்று நம்பப்படுகிறது. எப்படியானாலும் முஸோலினி சதிரில் இறங்கவேண்டிய காலம் வந்துவிட்டது. ஆகவே யுத்தம் கடுமையாய் விடுமோவென்றுகூட கருதலாம். லாபம் கிடைக்குமானால் முஸோலினி எதையும் செய்யும் சுபாவமுடையார். இதனால்தான் பால்கன் நாடுகளில் ருஷ்யா பிர வேசிப்பதில்லையென்றதும் பின் லாந்து-ருஷ்யா ராஜிக்கு ஒத்து ஊதத்தொடங்கினார்.

ருஷ்யா வெற்றிபெற்றுவிட்டது,பின் லந்து தோல்வியுறவில்லை. இதுதான் ராஜியின் விசேஷம். சென்ற நூறு தினங்களாக ருஷ்யா தன்னுடைய தீரத்தைக் காட்டியுங்கூட சிறுநாடா கிய பின்லந்தை அசைக்கமுடியவில்லை. இதனால் ஸ்டாலினுக்கு ஏற்பட்ட அவ மானமும் வருத்தமும் கொஞ்சமல்ல. இந்த நிலைமையில் நேசதேசங்களின் உதவியும் பின்லந்துக்குக் கிடைத்து விட்டால்ருஷ்யாவால் தாங்கமுடியுமா? இதனால்தான் ஸ்டாலினுக்கு அளவு கடந்த வருத்தம். ஜெர்மனிக்கு ருஷ் யாவிலிருந்து மூலப்பொருள்களும் நேரடியான உதவியும் கிடைத்தாக வேண்டும். ஆகவே எப்படியாவது ராஜிசெய்யவேண்டுமென்று ஹிட்ல ருக்கு ஓயாக்கவலை. ஸ்வீடனை பயமு றுத்தி அதன் மார்க்கமாக படைகளை அனுப்பக்கூடாது என்று அறிவிக்க ஏற்பாடுசெய்தது.

காலமறிந்து காரியத்தைச் செய்யும் வழக்கந்தான் பிரிட்டனுக்கில்லையே. இந்த வழியை பிரான்ஸும் பின் பற்றிக் கொண்டது. இதனாலேயே பின்லந்து விட்டுக்கொடுக்க இசைந் தது. பின்னால், பின்லந்துக்கு அனுப் பப் பெரும்படைகள் சேகரித்து வைத்திருப்பதாகவும், பின்லந்து உதவி யைக் கேட்க வில்லையேயென்றும் முறையிட்டன. பின்லந்துதான் பல நாட்களாக கதறியது பிரிட்டனுக் கும் பிரான்ஸுக்கும் கேட்க வில்லையோ? ஸ்டாலின் நிலையைப் அறிந்து தந்திரமாக சமாதானத்தைச் செய்து கொண்டார். மனமில்லாமல் பின்லந்தும் ஏற்றுக் கொண்டது. இதனால் ருஷ்யாவுக்குப் பெரும் லாபம். பின்லந்தில் பத்தில் ஒரு பாகம் ருஷ் யாவுக்குக் கிடைத்துவிட்டது. இனி மேல் பின்லந்தினால் மூச்சு விடமுடி யாது.

### ராஜாக்கள் கிலி

இந்திய சுதேச சமஸ்தான மன்னர் கள் சமீபத்தில் டில்லியில் கூடி இரண்டு தீர்மானங்கள் நிறைவேற்றி விட்டு தத்தம் இருப்பிடத்திற்குப் போய்விட்டார்கள். ஒன்று யுத்தத் துக்கு உதவி செய்வதாகப் பிரார்த் தனைத் தீர்மானம்; அடுத்தது தங் களுக்கு இருப்பதாக நினைத்துக்கொண் டிருக்கும் உரிமைகளும், அந்தஸ்துக் களும், அதிகாரங்களும் பாதுகாக்கப் படவேண்டும் என்பது. முதல் தீர் மானம் இல்லாமலேயே காரியங்கள் சரியாக நடந்து கொண்டுபோகும்; ஆகவே அதைப்பற்றி பிரமாதமாகச் சொல்லவேண்டியதில்லை. இரண்டா வது தீர்மானம் சமஸ்தான மன்னர் களின் மனச் சஞ்சலத்தைக் காட்டு வதாயிருக்கிறது. அவர்களுக்கு குடி ஜனங்களுக்கு பாதுகாப்பு அளிக்க வேண்டுமென்ற எண்ணமில்லையென்று தான் சொல்லவேண்டியிருக்கிறது. அப் படி யிருந்தால் தங்களைப் பாதுகாத்து கொள்ள வேண்டுமென்ற தீர்மானத் தைக் கொண்டுவந்து நிறைவேற்று வார்களா? இதிலிருந்து வெறுென்று கூடத் தெரிகிறது. விரைவில் இந்தியா சுதந்திர மடைந்துவிடும் என்றும் அது பொழுது தங்களுடைய அதிகாரங்க ளும் ஆட்டங்களும் முடிந்து விடுமென் பதுமாகும். பாரதநாட்டில் தோன்றி வரும் சுதந்திரச் சூரியனை இந்தப் பொம்மை ராஜாக்களால் தடுக்கமுடி யாது என்பதை அவர்களே அறிந்து கொண்டார்கள்; என்றாலும் அவர் களுக்கு இன்னும் நல்ல புத்திவர வில்லை. சுயநல மோகிகளான சமஸ் தான திவான்களும் இந்தப் பொம்மை அரசர்களுக்கு தூபம் போடுகிறார்கள்

கிடைத்த வரையில் லாபந்தானே யென்று நினைத்து சண்டப்பிரசண்டம் செய்கிறார்கள் திவான்ஜிகளும்.

இந்த சமஸ்தான மன்னர்கள் புத்திசாலிகளாயிருந்தால் காலப் போக்கை யநுசரித்து தத்தம் சமஸ்தானங்களில் ஜனநாயகத்தை ஏற்படுத்த முன் வர வேண்டும். இல்லையேல் அவர்களுடைய எதிர்கால நிலைமை பரிதாபகரமானதாய் முடிந்துவிடும். அன்னிய விடங்களிலிருந்து வருவிக்கப் பட்டு தடியடி தர்பார் நடத்தும் மந்திரிகள் காலம் வரும்பொழுது அகப்பட்டதைச் சுருட்டிக்கொண்டு சொந்த ஊருக்குக் கம்பி நீட்டிவிடுவார்கள். ஆகவே மன்னர்கள் குடிமக்களின் நல்லெண்ணத்தையும் ஒத்துழைப்பையும் பெற்றுக் கொள்ளவேண்டும். இதுவே மன்னர்களின் அசையாத உடையாத பாதுகாப்புக் கவசம்.

---

## காரைக்குடியில் :: :: கம்பன் திருநாள்

கவியினுக்கனியாம் கம்பன் திருநாள் பிரமாதி ஆண்டு பங்குனிமீ 8, 9, 10, 11, ஆகிய நான்கு தினங்களில் காரைக்குடி சிவன்கோவில் வீதியில் அமைத்துள்ள கொட்டகையில் நடைபெறும். இதற்கான நிகழ்ச்சி நிரல் சென்றவார 'ஊழியனில்' பிரசுரித்திருக்கிறோம். தமிழ் அறிஞர்கள் பலர் இத்திருப்பணியில் பங்கு கொள்வார்களென்பது நேயர்கள் அறிந்ததேயல்லவா! கம்பன் கவிபாடி கன்னித்தமிழ் வளர்க்க அன்பர்கள் யாவரும் விஜயஞ் செய்யவேண்டுவது தமிழரின் தலைசிறந்த கடனாகும்.

## காரைக்குடி முனிஸிபாலிடி

1940—41ம் வருஷத்தின் முதலாவது அரை வருஷத்திற்கு காரைக்குடி முனிஸிபல் எல்லைக்குள் வைக்கப்பட்டிருக்கும் கட்டை வண்டிகள் சைக்கிள்கள், வில் வண்டிகள் மற்ற வண்டி வாகனுதிகளுக்கும் 'காரைக்குடி முனிஸிபல் ஆபீசில் 1940ம் வருஷம் ஏப்ரல் மாதம் 1௨ முதல் 15ம் தேதி வரைக்கும் ஆபீஸ் தினங்களில் பகல் 11 மணிமுதல் மாலை 3 மணி வரை ரிஜிஸ்டர் செய்து நம்பர் பிளேட் கொடுக்கப்படும். ஷை தேதிக்குப் பிறகு நம்பர் பிளேட்டுகள் இல்லாத வண்டி வாகனுதிகளை ஜப்தி செய்து முனிஸிபல் ஆபீசில் வைத்து அபராதச் செலவு தொகையுடன் வசூலிக்கப்படும் என்று காரைக்குடி முனிசிபல் கமிஷனர் அறிவிக்கிறார்.

## காரைக்குடியில் இரு நாடகங்கள்

இவ்வூர் ஷண்முக விலாஸம் தியேட்டரில் மார்ச்மீ 15, 17 தேதி (வெள்ளி, ஞாயிறு) இரவுகளில் வள்ளி திருமணம், பவழக்கொடி ஆகிய இரண்டு நாடகங்கள் சிறப்பாக நடைபெற்றன. ஸ்ரீ எம். கே. தியாகராஜ பாகவதர் தகுந்த நடிகைகளுடன் தோன்றி சபையோரை மகிழ்வித்தனர். 17௨ இரவு முனிசிபல் கமிஷனர் நாடகங்களைப்பற்றிக் குறிப்பிடுகையில் இவ் வசூல் தேவகோட்டைக்குப் பக்கத்திலுள்ள ராம்நகரில் ஒரு சிசு சம்ரக்ஷணை சாலை நிதிக்கு உபயோகப் படுத்தப்படுமென்றும், டாக்டர் ஸ்ரீ ரத்னசாமி பெரு முயற்சி எடுத்துக்கொண்டதாகவும் கூறி நடிகை—நடிகர்களுக்கு நன்றி செலுத்தி ஷை நிதிக்கு பணவுதவி செய்த நண்பர்களுக்கும் நன்றியறிதலையும் தெரிவித்தார்.

---

# காரைக்குடி நகரசபை

## காந்திஜி உருவச்சிலைக்கு ரூ. 700

(நமது நிருபர்.)

காரைக்குடி நகரசபையின் சாதாரணக் கூட்டம் ஒன்று 20—3—40 மாலை 4-30 மணிக்கு சேர்மென் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் தலைமையில் கூடியது. தலைவர் உட்பட 8 அங்கத்தினர்கள் விஜயஞ்செய்திருந்தார்கள்.

**சந்து அடைக்க அனுமதி**

S. M. S. வித்தியாசாலை ஹைஸ்கூல் கட்டிடத்திற்கும் அதன் ஹாஸ்டல் கட்டிடத்திற்கு மிடையே இருக்கும் சந்தை இரண்டுபக்கங்களிலும் இரும்புக் கேட்டுகள் போட்டு அடைப்பது என்று தீர்மானிக்கப்பட்டது.

**காந்திஜி உருவச் சிலை**

இமிடேஷன் மார்பிள் கல்லில் காந்திஜியின் உருவச்சிலைக்கு ரூ 500-ம் அதனுடைய பீடத்திற்கு ரூ 200-ம் ஸ்ரீ சித. ராய. சிதம்பரம் செட்டியார் நன்கொடையாகக் கொடுக்க ஒப்புக் கொண்டிருப்பது வந்தனத்துடன் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

**நகரசபைகள் கான்பரேன்ஸ்**

நகரசபைகளின் சேர்மன், வைஸ் சேர்மன், கமிஷனர் முதலியவர்களின் கான்பரென்ஸ் ஏப்ரல் மீ 20, 21 தேதிகளில் நடத்தப்போவதாகத் தெரிவித்துள்ள மதராஸ் கார்ப்பரேஷன் மேயரின் லெட்டர் ரிகார்டு செய்து கொள்ளப்பட்டது.

**டெலிபோன்**

ஆபீஸ், புதுக் கட்டிடத்திற்குப் போகும்பொழுது கமிஷனருடைய ஜாகைக்கு டெலிபோன் கனெக்ஷன் செய்துகொள்ள அனுமதிக்கப்பட்டது.

**ஆக்கிரமிப்புகள்**

8 அடி உயரத்திற்குக் குறைவில்லாமலும் 2 அடி அகலத்திற்குமேல் வியாபிக்காமலும் உள்ள ஆக்கிரமிப்புகளை பொதுவாக எங்குரோச்மெண்டிலிருந்து விலக்க அனுமதிக்கப்பட்டது.

**ரோடுக்கு இடம் நன்கொடை**

1-வது வார்டில் 4 ஏக்கர் 37 செண்டு உள்ள இடத்தை காரைக்குடி ஒ. சிறுவயல் ரோடு போடுவதற்காக முனிசிபாலிட்டிக்கு நன்கொடையாகக் கொடுப்பதற்கு சம்மதித்துள்ள கழனிவாசல் தர்மாசனம் கமிட்டியின் லெட்டரை வந்தனத்துடன் ஒப்புக் கொண்டு சீக்கிரம் ரோடுபோடுவது என்று தீர்மானிக்கப்பட்டது.

**மேஸ்திரியின் உத்தியோககாலம்**

முனிசிபல் ஆபீஸ் கட்டிட மேற்பார்வையிடும் மேஸ்திரியின உத்தியோக காலத்தை 12—3—40 முதல் இரண்டுமாத காலத்திற்கு நீடிக்கச் செய்ய அநுமதிக்கப்பட்டது.

**ரோடு டிராப்பிக் கமிட்டி**

1—4—40௨ முதல் அமுலுக்கு வரப்போகும் ரோடு போக்குவரத்து விதிகளைப் பொது ஜனங்களுக்குத் தமிழில் துண்டு பிரசுரங்கள் அச்சடித்துக் கொடுத்தல் மூலமும், பொதுக்கூட்டங்கள் கூட்டிப் பிரசாரம் செய்வது மூலமும், சினிமாஸ்லைடுகள் மூலமும், பள்ளிக்கூட அதிகாரிகளை ஷை விதிகளைப்பற்றி மாணவர்களுக்கு போதிப்பதின் மூலமும், உள்ளூர் சமாச்சாரப் பத்திரிகைகளை போக்குவரத்து ஆக்டின் விதிகளை வாராவாரம்பிரசுரிக்கும்படி கேட்டுகொள்ளுதல் மூலமும், முக்கியமான வீதிகளில் பாதசாரிகள், வண்டிகள் முதலியவைகளுக்கு விதிகளின்படி நடக்கச் செய்ய போலீசுக்கு உதவி செய்ய சாரணர்களின் உதவியைத் தேடுதல் மூலமும், சைக்கிள்கள் மற்ற வண்டிகள் எல்லாவற்றிற்கும் வழிகாட்டும்பொருட்டு ரோடு முனங்குகளிலும், ஜங்ஷன்களிலும் தகுதியான அடையாளங்கள் செய்யும்படி முனிசிபல் அதிகாரிகளைக் கேட்டுக் கொள்ளுவதன் மூலமும், மற்றும் உள்ளூர்ச் சங்கங்களை பிரசாரங்கள் செய்யும்படி கேட்டுக் கொள்ளுதல் மூலமும், தெரியப்படுத்துவதான நடவடிக்கைகள் அநுமதிக்கப்பட்டன.

**காந்திஜியின் உருவப்படம்**

புதிய முனிசிபல் ஆபீஸ் கட்டிடத்தில் மஹாத்மா காந்தியடிகளின் ஆயில் பெண்டிங் உருவப்படம் ஒன்று அமைப்பதற்காக கவுன்சிலர் ஸ்ரீ முரு. அருணசலம் செட்டியாரின் நன்கொடை வந்தனத்துடன் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

**அவசர ஸ்பெஷல் மீட்டிங்குகள்**

20-3-40௨ மாலை 5-30மணிக்கு நகரசபையின் அவசர ஸ்பெஷல் மீட்டிங் சேர்மன் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் தலைமையில் நடைபெற்றது. தலைவர் உட்பட 8 அங்கத்தினர்கள் விஜயம் செய்தார்கள்.

1940-41ம் வருடத்திற்கு பினல்டி அன்னியில் லைசென்ஸ் பீஸ் செலுத்துவதற்கான காலத்தை 30-3-40௨ முடிய நீடிக்கச் செய்யலாமென்று அநுமதிக்கப்பட்டது.

20-3-40௨ மாலை 6-மணிக்கு நகரசபையின் ஸ்பெஷல் மீட்டிங் ஒன்று சேர்மன் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் தலைமையில் நடைபெற்றது. தலைவர் உட்பட 8 அங்கத்தினர்கள் வந்திருந்தார்கள்.

கமிஷனர் ஸ்ரீ டி. புருஷோத்தம் திடீரென மாற்றப் பெற்றிருப்பதால் முனிசிபல் ஆபீஸ் கட்டிடம் முதலிய தொடங்கிய முக்கிய வேலைகள் முடிவு பெற்று 6, 7, மாதங்கள் வரை இவ்வூர் முனிசிபாலிட்டியில் இருக்க அநுமதிக்க வேண்டுமென்று அரசாங்கத்தை வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறது என்று தீர்மானிக்கப்பட்டது.



காரைக்குடியில் புதிதாக நியமனம் செய்யப்பெற்ற ஆனரெரி மாஜிஸ்திரேட் ஸ்ரீ அள. கரு. அடைக்கப்ப செட்டியார்

---

## ராம்காரில் சமரஸ எதிர்ப்பு மகாநாடு

### சுபாஷின் தலைமையுரை

மார்ச் 19௨ ராம்காரில் கூடிய அகில இந்திய சமரச எதிர்ப்பு மகாநாட்டில் தலைமை வகித்துப் பேசுகையில் ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ் மேற்படி மகாநாட்டைத் தீவிரவாதிகள் கூட்டும்படி ஏற்பட்ட காரணங்களை விளக்கினர்.

தற்போதைய காரியக் கமிட்டியும், காங்கிரஸ் மிதவாதத் தலைவர்களும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துடன் சமரசம் பேசமுயன்று வருவதை எதிர்க்க நாட்டிலுள்ள எல்லாச் சக்திகளையும் ஒன்று திரட்டுவதற்காகவே மகாநாடு கூட்டப்பட்டதென அவர் கூறினர்.

**யார் தீவிரவாதிகள்?**

தீவிரவாதம் என்றால் என்ன! இதை விளக்கவேண்டியதவசியம். இப்பொழுது நம்முடைய இயக்கத்தில் ஏகாதிபத்திய எதிர்ப்பே முக்கியமான அம்சம். ஏகாதிபத்தியத்தை ஒழித்து தேசிய விடுதலையை அடைவதே இப்பொழுது நமது முக்கியமான கடமை. சுதந்திரம் ஏற்பட்டதும் தேசியப் புனருத்தாரணம் தோன்றிவிடும். அதுதான் நம்முடைய இயக்கத்தின் அபேதவாத அம்சம்.

இந்தச் சமயத்தில் யார் யார் ஏகாதிபத்தியத்தைத் தீவிரமாகவும் பலமாகவும், எதிர்த்துப் போராடுகிறார்களோ அவர்களே தீவிரவாதிகள். இதில் பதுங்குபவர்கள், ஏகாதிபத்தியத்துடன் சமரசம் செய்துகொள்ள முயல்பவர்கள். தீவிரவாதிகளாகார். நம்முடைய இயக்கத்தின் அடுத்த கட்டத்தில் தீவிரவாதத்துக்கும் அபேதவாதத்துக்கும் வித்தியாசமிராது.

இப்பொழுது இந்தியாவில் மிக நெருக்கடியான காலம் ஏற்பட்டிருக்கிறதென்றும், இது தலைவர்கள் துணிந்து கருமம்புரியவேண்டிய சமயமென்றும், தீவிர வாதிகளுக்கு இனி பெருத்த சோதனை காலம் ஏற்படப் போகிறதென்றும், காரியக் கமிட்டியும் தலைவர்களும் தக்க வகையில் வழிகாட்டத் தவறினால் தீவிரவாதிகள் தங்கள் கடமையை உணர்ந்து நடக்க வேண்டுமென்றும் சுபாஷ் பாபு வலியுறுத்தினர்.

---

## வெற்றிக்கு மூன்று சாதனங்கள்

"நாம் வெற்றி அடைய வேண்டுமாயின் நம்முள் ஒற்றுமை வேண்டும்; கட்டுப்பாடு வேண்டும்; மகாத்மா காந்தியின் தலைமையில் நமக்குப் பூரண நம்பிக்கை வேண்டும். நமது இயக்கம் முன்னம் பெருமையுற்றதற்கு மகாத்மாவின் தலைமையே காரணம்; அவருடைய தலைமையிலேயே நாம் மேற்கொண்டும் அதிகப் பெருமையை அடையலாம்".

—ராஷ்டிரபதி அஸாத்

---

## சென்னை மேல்சபை தேர்தல்

### காங்கிரஸுக்கு வெற்றி

சென்னை மேல்சபைக்கு மாகாணத்தில் 16 தொகுதிகளில் தேர்தல் நடந்தது. மொத்தமுள்ள 12 பொதுத் தேர்தல் தொகுதிகளில் காங்கிரஸுக்கு 11 ஸ்தானங்கள் கிடைத்துள்ளன. இவர்களில் நான்கு பேர்கள் ஏற்கனவே போட்டியின்றி தெரிந்தெடுக்கப்பட்டார்கள்.

# உள்நாட்டுச் செய்திகள்

இராயவரம் 11—3—40 திங்கட்கிழமை மாலை 5மணிக்கு ஸ்ரீ இராமகிருஷ்ண தேவரின் படத்தை அலங்கரித்து ஊர்வலம் புறப்பட்டது. 6-மணிக்கு பாரதி சதுக்கத்தில் ஸ்ரீ கே. ஆர். சங்கரஐயர் தலைமையில் கடவுள் வாழ்த்துடன் கூட்டம் ஆரம்பிக்கப்பட்டது. தலைவர் முன்னுரையின் பின்னர் திருச்சி ஸ்ரீ கே. தங்கம்பரமானந்தா யோகாப்பியாசம் செய்து காண்பித்தார். ஸ்ரீ விவேகானந்தாவின் போதனைகள் பற்றி சுவாமி ஹன்சா ஸ்ரீ எஸ். நடேசஐயர் பி. ஏ. எல். டி ஆகியோர்கள் பேசினார்கள். தலைவர் பின்னுரையின் பின் ஸ்ரீ அழ. காளிலிங்கம் பிள்ளை வந்தனங்கூற கூட்டம் 8-45 மணிக்கு கலைந்தது.

ஆத்தங்குடி:—15-3-40 மாலை 3 மணிக்கு இவ்வூர் ஸ்ரீ பி. கே. பி. எஸ். செல்லப்ப செட்டியார் ஆதரவில் நடைபெறும் ஸ்வாமி எயிடட் எலிமெண்டரி பாடசாலை மாணவ மாணவிகளின் பெற்ளோர் சங்கம் ஸ்ரீ சு. வீர. கதிரேசன் செட்டியார் தலைமையில் நடைபெற்றது.

அவ்வமயம் பல மாணவ மாணவிகளால்சம்பாஷணை, பாட்டு, கும்மி, பேச்சு முதலியன நடைபெற்றன. பின்னர் ஸ்ரீ சுவாமிநாத அய்யர் "ஆசிரியர்களும் மாணவர்களும்" என்பது பற்றி திருவிளையாடல், பாரதம் முதலியவைகளிலிருந்து தக்க மேற்கோட்களுடன் சொற்பொழிவாற்றினர். பரிசுகள் தலைவரால் வழங்கப்பட்டபின், தலைமை ஆசிரியர் ஸ்ரீ ஜேம்ஸ் தங்கத்துரை வந்தனோபசாரம் கூறக் கூட்டம் முடிந்தது.

இலக்ஷ்மிபுரம்:—இவ்வூர் ஸ்ரீ மீனாட்சி சங்கத்தின் 14-வது ஆண்டு 11-வது மாதக் கூட்டம் நாளது பிரமாதிவருடம் மாசி மீ 30ம் நாள் (13—3—40) மாலை 4 மணிக்கு சொக்கலிங்க வித்தியாசாலையில் ஸ்ரீ எம். இராமநாத அய்யர் தலைமையில் ஆரம்பமாயிற்று. மாணவர் இறைவணக்கம் பாடியதும் தலைவரின் முடிவுரையின் பின்னர் உதவிக்காரியதரிசியால் சென்ற மாதக் கூட்ட நிகழ்ச்சி வாசிக்கப் பெற்று அங்கீகரிக்கப்பெற்றது. மாணவ மாணவிகள் முறையே சுதேசியம், திருவள்ளுவர், கம்பர், ஆண்டாள், விவேகாநந்தர் வீர மொழிகள்" என்னும் பொருள்கள் பற்றி சொற் பெருக்காற்றினார்கள். இடையிடையே தேவாரம், திருப்புகழ், பாரதியார்பாடல்கள் பாடப்பெற்றன. இறுதியில் தலைவர் முடிவுரை கூறியதும், வந்தன வாழ்த்துடன் கூட்டம் நிறைவெய்தியது.

திருப்பத்தூர்:—இவ்வூரிலுள்ள நாகப்ப மருதப்ப போர்டு மிடில்ஸ்கூல் மாணவர், ஆசிரியர் சங்கங்களின் 2-வது ஆண்டுப் பூர்த்திக் கொண்டாட்டங்கள் மார்ச்சுமீ 11-தேதி மாலை 6-மணிக்குக் கலாசாலையில் விளையாடும் மைதானத்தில் இராமநாதபுரம் ஜில்லாக் கல்வி அதிகாரி ஸ்ரீ எம். ஆர். சுப்பிரமணிய அய்யர் பி. ஏ. எல். டி. தலைமையில் கொண்டாடப்பெற்றன. அவ்வமயம் உள்ளூர் உத்தியோகஸ்தர்களும், பல பிரமுகர்களும், அனேக ஸ்திரீகளும் குழுமியிருந்தனர். கலாசாலை மாணவிகள் இருவரால் கடவுள் வணக்கம் பாடப்பட்டு, தலைவர் முகவுரை கூறியபின், இரண்டு சங்கங்களின் அறிக்கைகளும் அந்தந்தச் சங்கக் காரியதரிசிகளால் படிக்கப்பட்டன. பின் மாணவர் மாணவிகளால் தமிழிலும், ஆங்கிலத்திலும் சம்பாஷணைகள், நடிப்புகள், கும்மி, கோலாட்டங்கள் முதலியன நடத்தப்பட்டன. ஆசிரியர்கள் ஷேக்ஸ்பியர் இயற்றிய 'ஜூலியஸ் ஸீஸர்' நாடகத்தில் ஒரு காட்சியையும், தமிழில் ஒரு ஹாஸ்ய நாடகத்தையும் நடித்தனர். தலைவரவர்கள் இக்கலாசாலை ஆசிரியர்களும், மாணவர்களும் பள்ளிக்கூட முன்னேற்றத்திற்காகப் பல்வேறு முறைகளிலும் வேலை செய்வதைப்பற்றி மெச்சி தமது அபிப்பிராயங்களைக்கூறி, விழாவில் கலந்துகொண்ட மாணவ மாணவிகளுக்கும் கலாசாலையில் நன்கு படித்து வரும் மாணவர்களுக்கும், கலாசாலைக்குத் தவறாமல் ஆஜராகிவரும் மாணவர்களுக்கும் கலாசாலை நன்கொடையாளர்களான நாகப்ப பிள்ளை குடும்பத்தினர் வழங்கிய பரிசுகளைக் கொடுத்தனர். பிறகு வந்தனோபசாரம் கூறப்பட்டு தலைவரவர்களுக்குப் பூமாலை சூட்டிய பின் மாணவிகளால் வாழ்த்துப்பா பாடப்பட்டுக் கூட்டம் சுமார் 9-மணிக்கு முடிவு பெற்றது.

கோத்தமங்கலம்:—10—3—40 ஞாயிற்றுக்கிழமை மாலை 3-மணிக்கு பள்ளத்தூர் ஹைஸ்கூல் தலைமை ஆசிரியர் ஸ்ரீ ஏ.எம். எஸ். ராகவ அய்யங்கார் தலைமையில் கொத்தமங்கலம் செல்வ விநயகர் கல்விச் சாலையின் ஒன்பதாம், ஆண்டுவிழா ஆரம்பிக்கப்பட்டது.

கொடியேற்றுவிழா அவர் தலைமையில் நடைபெற்றபின் பள்ளி மாணவமாணவிகளால் உரையாடல், பாடல், நடிப்பு, முதலியனவும் ஸ்ரீமுத்து வெங்கடாஜலம் அய்யர் "கல்விச்செல்வம்" என்பதுபற்றியும், ராமநாதபுரம் வித்வான் ஸ்ரீ சிவஞானம் பிள்ளை "தமிழ் மொழி" என்பது பற்றியும் பேசினார்கள். அன்று இரவு 9-30 மணிக்கு ஹை பள்ளி மாணவ மாணவிகளால் "திலகவதி" என்னும் சமூக நாடகம் நடைபெற்றது.

தேவகோட்டை: 13—3—40 மாலை 5-மணிக்கு திருமணவயல் ஏ. எல். ஏ. ஆர். பங்களாவில் கண்ணையாகிய தென்னலை நாட்டார் சங்கம் நிருவாகக் கமிட்டிக் கூட்டம் நடைபெற்றது. ஸ்ரீ சொ. கருப்பய்யா அம்பலம் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பெற்றன.

காரையில் ஏற்படுத்தியிருக்கும் வாசகசாலைக்கு "சுதேசமித்திரன்" தினப்பதிப்பும் "ஊழியன்" வாரப்பதிப்பும் வருத்துவதென்றும் சங்கநிதி திரட்ட 7 பேர் கொண்ட வசூல்கமிட்டி ஒன்றும் ஏற்படுத்தியதோடு குடிதண்ணிருக்கு அடியிற்கண்ட கிராமங்களில் மிகவும் கஷ்டமாகவிருப்பதால் காரை எழுவங்கோட்டை, கல்லங்குடி கோட்டவயல், கள்ளிக்குடி சிறுமடை, ஈகரை பிரண்டவயல், மானம்புவயல், மருத்தாணி, வெட்டிவயல், நாச்சாங்குளம், தென்னீர்வயல், பனங்தோப்பு, உடப்டம்பட்டி, மார்க்கண்டன்பட்டி, முதலான கிராமங்களில் கிணறுகள் வெட்டிக் கொடுக்கும்படி இராமநாதபுரம் ஜில்லா போர்டாரைக் கேட்டுக்கொண்டும் சேர்ந்தார்ப்போல மூன்று ஆண்டுகளாய் பஞ்சமாய்விட்டதால் விவசாயிகளின் நிலை ரெம்பவும் கஷ்டமாக விருப்பதை கொஞ்சமும் பொருட்படுத்தாது ஆடுமாடுகளை ஜப்திசெய்து வரிவசூல் செய்துவருவதைக் கண்டித்தும் போதிய தவணைகள் கொடுத்து வரிவசூல் செய்யவேண்டுமென்றும் 20, 25 வருஷங்களாய் மராமத்துச் செய்யாமல் பாழ்பட்டு போயிருக்கும் கண்மாய்களை மராமத்துச்செய்யும்படியும் சிவகங்கை சமஸ்தானத்தாரைக் கேட்டுக் கொண்டும் தீர்மானங்கள் நிறைவேறின.



கேள்விப் பெட்டி

## வைஸ்ராயிடம் அவநம்பிக்கையில்லை

(மகாத்மா காந்தி)

காங்கிரஸ் காரியக்கமிட்டி பாட்னாவில் செய்த தீர்மானத்தை மகாத்மா காந்தி ஆதர்ப்பது லார்டு லின்லித்கோவிடம் அவருக்குள்ள அவநம்பிக்கையைக் காட்டுவதாகாதா என்று கேட்டிருப்பதற்கு மகாத்மா அடியில் வருமாறு பதிலளிக்கிறார்:—

வைஸ்ராயின் உண்மையை நான் சந்தேகிக்கவில்லை. லார்ட் லின்லித்கோவைப் போல் தன் வார்த்தைகளை அளந்து பேசும் ஒரு வைஸ்ராயைநான் பார்த்ததில்லை. அவருடன் பேசுவதென்றாலே சந்தோஷமாயிருக்கிறது. நாங்கள் ஒத்துப்போக முடியாவிட்டாலும், ஒருவரையொருவர் சமீபித்துக் கொண்டோம் என்று சென்ற சந்திப்பைப்பற்றிச் சொன்னேன். அதையேதான் இப்போதும் சொல்லுகிறேன். இன்னம் சில நாட்கள் நாங்கள் பேசிக்கொண்டேயிருந்திருக்கலாம். ஆனால், திருப்பித் திருப்பி அதே அபிப்பிராயத்திற்குத் தான் வந்திருப்போம். எனக்குக் கட்டுப்பாடு ஒன்றுமில்லையாது. ஏனெனில், நான் எனக்காகத்தான் பேசினேன். ஆனால், அவருக்குக் கடுமையான கட்டுப்பாடு இருந்தது. மேல் உத்தரவுக்கு உட்பட்டு அவர் பேசவேண்டியிருந்தது. உத்தரவுக்குப் புறம்பாக பேசுவதற்கு அவருக்கு அதிகாரம் கிடையாது. ஆகவே நல்ல நண்பர்கள் என்ற முறையில் நாங்கள் பிரிந்தோம்.

காரியக் கமிட்டி தீர்மானத்தில் காணப்படும் நிலைமைதான் என் நிலைமையும். பிரிட்டனிலிருந்து பிரியும் உரிமையுடன் பூர்ண டொமினியின் அந்தஸ்து அளிப்பதென்று பிரிட்டன் உண்மையாகவே விரும்பினால், காங்கிரஸ் நிலைமையை ஒப்புக் கொள்வதில் அவர்களுக்கு கஷ்டமேயிருக்க முடியாது. ஆனால் துரதிர்ஷ்ட வசமாக இந்தியாவின் எதிர்காலத்தை நிர்ணயிக்க வேண்டியது பிரிட்டனேயொழிய இந்தியா அல்ல என்று லார்ட் ஜெட்லெண்ட் சொல்லியிருக்கிறார். இம்மாதிரி ஒரு குடியேற்ற நாட்டு அந்தஸ்தை கேள்விப்பட்டதேயில்லை. இனிமேல் நாம் இந்தியாவை வைத்துக்கொண்டிருக்க முடியாது என்று பிரிட்டன் நிச்சயப்படுத்திக்கொண்டுவிட்டால் இப்போது அவர்கள் சார்பாக சொல்லப்படும் கஷ்டங்களை யெல்லாம், சூரியனுக்கு முன் இருள் நீங்குவதைப்போல் நீங்கிவிடும். ஏனெனில், அவைகளெல்லாம் அவர்களுடைய சிருஷ்டிகளே. சரண்டும் கொள்கையில் இவைகளெல்லாம் இயற்கயையாயுள்ளவை. வைஸ்ராயிடம் அவநம்பிக்கை எதுவும் கிடையாது என்பது இப்போது உங்களுக்குப் புரிகிறது என்று நம்புகிறேன்.

## பிரிட்டன்—இந்தியா சமாதானம்

"டைம் அண்டு டயிட்" என்ற ஆங்கிலப்பத்திரிக்கையில் ராஜாஜி எழுதியிருக்கும் கட்டுரையிலிருந்து சில குறிப்புகளைத் தருகிறோம்:

காங்கிரஸ் தன்னிடமே எல்லா மைனாரிட்டிகளுக்கும்தங்களுக்கு அவசியமான பாதுகாப்புகளை நிச்சயிக்கலாமென்ற உறுதியை காங்கிரஸ் திட்டமான முறையில் ஒத்துக்கொண்டிருக்கிறது. பொது ஒப்பந்தத்திற்கு முரண்பாடு ஏற்படும் பக்ஷத்தில் பிரேரணைகளை மத்யஸ்தத்திற்கு விடலாமென்பதற்கும் காங்கிரஸ் ஒத்துக்கொள்கிறது. இந்த அடிப்படையில் பிரிட்டன் இந்தியாவின் சுதந்திரத்தை அங்கீகரிப்பது சுலபமாகும். காங்கிரஸ் கட்சி, மைனாரிட்டிகள் விஷயத்தில் இதற்கு மேலும் தாராளமாகவோ அல்லது நியாயமாகவோ நடக்க முடியாது என்பதை வெளியிலுள்ள முஸ்லீம் தேசங்கள்கூட உணரக்கூடும். ஆனால் காங்கிரஸானது தேச சுதந்திரத்தைக் கோருவதை யாரும் தடைசெய்யக் கூடாது.

பிரிட்டனிலும் இதர நாடுகளிலும் இந்தியாவைப் பற்றி உண்மை தெரிய வழியில்லை. அந்நாடுகளில், ஆங்கிலோ இந்தியப் பத்திரிகைகள், ஸிவில் ஸர்விசுக்காரர்கள் இவர்கள் கூறுவதையே வேத வாக்காகக் கருதப்படுகிறது. கட்சிஸ்தாபனங்கள் ஒரு ஒப்பந்தத்திற்கு வரத் தவறியபோதும், ஒரு ஒப்பந்தம் மிக அத்யாவச்யமான போதும், ஜனங்கள் எல்லாவகுப்புகளின் பிரதிநிதிகளையும் தெரிந்தெடுத்து அப் பிரதிநிதிகள் மூலம் விவகாரத்தை முடிவு செய்வதே நிலாக்கியமான வழி. எல்லா சமூகங்களையும் சேர்ந்த ஜனங்கள் தங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கட்டும். அந்த டெலிகேட்டுகள் அடங்கிய சிறு கமிட்டி, அரசியல் நிர்ணய வேலையைத் திருப்திகரமாகச் செய்யக் கூடும். அவ்விதக் கமிட்டிக்கு பூர்ண அதிகாரம் அளிக்கப்பட வேண்டும். இதனால் இந்தியப் பிரச்னைகள் தீர்ந்துவிடும். இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கும் சமாதானம் ஏற்படும். பிரிட்டிஷார் நிர்ப்பந்தமூலம் ஆட்சிபுரிந்து வருவார்களேயானால், இந்த யுத்தம் சம்பந்தமாக பிரிட்டிஷ் நோக்கங்களும் லக்ஷியங்களும் உண்மையாக மாட்டாது.

ஸினிமாக் கதைச் சுருக்கம்

## ஹரி ஹர மாயா

தேவர்களும் அசுரர்களும் திருப்பாற் கடலைக் கடைந்தபொழுது சண்டையிட அதைத் தந்திரத்தால் நிவர்த்திக்க மோகினி உருக்கொண்டு அசுரர்களை ஏமாற்றி தேவர்களுக்கு அமிர்தத்தை அளித்து மறைகிறார் மஹாவிஷ்ணு. அசுரர்கள் கோபங்கொண்டு தங்கள் குரு சுக்கிரரிடம் முறையிட அவர் உதவியால் சிவபெருமானிடம் யாரும் அடைதற்கு முடியாத வரத்தைப் பெறுகின்றனர்.

பின்னர், வரம் கிடைத்த இறுமாப்பினால் அசுரர்கள் முனிவர்கள் செய்யும் யாகங்களை கலைக்கின்றனர். ரிஷிகள் இந்திரனிடம் முறையிட இந்திரன்—'சிவன் வரத்திற்கெதிர்வரமில்லை' என்று தெரிவிக்கக் கோபங்கொண்ட ரிஷிகள் சிவனையும் அவரைக் குறிக்கும் சின்னங்களையும் பகிஷ்கரிக்கின்றனர்.

நாரதர், கைலைக்குச் சென்று சிவனுக்குத் தூபம் (கோபம்) போட்டுவிடுகிறார். பரமசிவன் விஷ்ணுவையும் அழைத்துக்கொண்டு பிக்ஷாடனராகவும், மோகினியாகவும் உருமாறிப் பூலோகம் அடைகின்றனர்.

பிக்ஷாடனரைக்கண்ட ரிஷிபத்தினிகள் அவர்மீது மோகங்கொள்ள, அவரது ஸ்பரிசத்தால் குழந்தையை அடைகின்றனர். பிறகு திடீரென மறைந்த பிக்ஷாடனரை பின்பற்றி ரிஷிபத்தினிகள் ஓடுகிறார்கள்.

மோகினியாக வந்த விஷ்ணு ரிஷிகளைத் தனது இனிய கானத்தாலும் சாகஸத்தாலும் மயக்கித் தன்னைப் பின்பற்றிவரச் செய்து ரிஷிகளையும் ரிஷிபத்தினிகளையும் சந்திக்கச்செய்து மறைகிறார். ரிஷிகள் ஆசிரமத்தில் குழந்தைகளைக் கண்டு தத்தம் மனைவிகளிடம் சந்தேகம் கொண்டு ஆசிரமத்தை விட்டுவிரட்டிவிடுகின்றனர்.

பிறகு பிக்ஷாடனரும் மோகினியும் சந்தித்து காதல்கொள்ள அதன் பயனாக 'ஐயனார்' தோன்றுகிறார். நாரதர் பார்வதியையும் லக்ஷிமியையும் இச் சம்பவத்தைப் பார்க்கச் செய்கிறார்.

சிவபெருமான் இது தனது திருவிளையாடல்களில் ஒன்று என்றும் தாருகாவனத்து ரிஷிகளின் கர்வத்தை அடக்கவும், ஐயனார் அவதரிக்கவும் காரணங்களைக் காட்டி சமாதானம் செய்கிறார்.

இங்நிலையில் தாருகாவன ரிஷிகள் முன்னிலும் அதிகக்கோபம் கொண்டு ஒரு கடுமையான யாகத்தைச்செய்து அதன் மூலம் சிவனைக் கொல்ல ஒரு கொடிய பாம்பை ஏவுகின்றனர். அது சிவனது ஆபரணமாவதும். மற்றும் பல ஆயுதங்களை ஏவ அவைகளையும் தனது அலங்காரப் பொருள்களாகச் சிவபெருமான் ஏற்றுக்கொள்கிறார். கடைசியாக ஒரு கொடிய ராக்ஷசனை சிருஷ்டித்து ஏவ, அவனைத் தனது காலடியில் போட்டு திருநடனம் செய்ய, நாரதர் தாம் வேடிக்கையாகச் செய்த கலகம் பெரியதாக மூண்டதைக்கண்டு சிவபெருமானைத் துதித்து சாந்தமடையக் கேட்டுக்கொள்கிறார். பின்னர் சிவனது கருணை நோக்கு எல்லோருக்கும் கிடைக்கிறது.

---

## மோஹன் பிக்சர்ஸ் ஏற்பாடு

மார்ச் 20-ந் தேதி ராம்காரில் மௌலானா அபுல் கலாம் அஸாத் அக்ராசனத்தில் நடக்கப்போகும் காங்கிரஸ் பட ரூபமாக வெளிவரப்போகின்றது.

சிகாகோ ரேடியோ கம்பெனியாரின் ஒத்துழைப்பைக்கொண்டு பம்பாய் மோஹன் பிக்சர்ஸார் இக்கைங்கரியத்திலீடுபட்டிருக்கிறார்கள். டெக்னீஷியன்கள் எல்லோரும் காமிரா, மைக்ரபோன் சஹிதம் ஏற்கனவே அனுப்பப்பட்டு விட்டார்கள்.

## காந்திஜி பிலிம்

### ஸ்ரீ ஏ. கே. செட்டியாரின் முயற்சி

மகாத்மா காந்தியின் வாழ்க்கைச் சரிதையை காண்பிக்கும் முதல் ஸினிமாப்படத்தில்மகாத்மா காந்தியே தோன்றுகிறார். இந்த பிலிம் கூடிய சீக்கிரத்தில் இந்தியாவிலும் வெளி நாடுகளிலும் காட்டப்படும். டாகுமெண்டரி பிலிம்ஸ் லிமிடெட்டின் காமராமேன் படத்தை இறுதியாக முடிக்க ராம்காரில் மகாத்மாவுடன் இருக்கிறார். இந்தக் கம்பெனியின் மானேஜிங் டயரக்டர் ஸ்ரீ ஏ. கே. செட்டியார் மகாத்மாவின் பழைய நடமாட்டங்கள் உள்ள நியூஸ் ரீல்களை சேகரிக்கத் தென் ஆபிரிக்காவிலும், ஐரோப்பாவிலும், இரண்டு வருஷ காலம் சுற்றுப்பிரயாணம் செய்திருக்கிறார். இவற்றில் அநேகமாக எல்லாம் அதிக விலைகொடுத்து வாங்கப்பட்டிருக்கின்றன. ஒரேவொரு நியூஸ் ரீல் மட்டும்தான், காந்திஜியைப் போற்றும் ஐரோப்பியர் ஒருவரால் இனமாகக் கொடுக்கப்பட்டது. ஸ்ரீ செட்டியார் சிவகிராம ஆசிரமத்தில் தங்கி மகாத்மாவின் அன்றாடவேலைகளை எல்லாம் பிலிமெடுத்திருக்கிறார்.

பிலிம் சென்ற 15 வருஷங்களாக நடந்த காங்கிரஸ் செஷன்கள் தண்டி யாத்திரை, தொண்டர் படை அணி வகுப்புகள், கைத் தொழில் வேலைகள் ஆகியவற்றைக் காண்பிக்கிறது. முக்கிய ஸீன்கள்: ஜோகன்ஸ் பார்க்கில் ஸ்ரீ கோகலேயின் வரவேற்பு, பாலகங்காதரர் பிரேத ஊர்வலம், வட்டமேஜை மகாநாட்டுக்குக் காந்திஜி சென்றகாட்சி, மன்னர் அளித்த விருந்துக்கு மகாத்மாவின் வருகை, சார்லி சாப்ளினை சந்தித்தது, இத்தாலி வெளிநாட்டு மந்திரியுடன் துருப்புகளை பார்வையிட்டது காந்திஜியைப்பற்றி வி ஜே. பட்டேலுக்கும் ரோமெயின் ரோலந்துக்கும் நடந்த பேட்டி, ஜோகன்ஸ் பார்க்கிலும் சபர்மதி ஆசிரமத்திலும் காந்திஜியின் வாழ்க்கை, இங்கிலாந்தில் அவர் தங்கியிருந்தது, எர்வாடாவில் சிறைப்பட்டிருந்தது, சமீபத்தில் சாந்திநிகேதனத்தில் நடந்த காந்தி—தாகூர் சந்திப்பு ஆகிய ஸீன்கள் குறிப்பிடத் தக்கவை.

இந்த பிலிம் 21 பாஷைகளில் வெளியிடப்படும். இந்தியாவில் வெளியாகும் பிலிம் 12,000 அடி நீளம் இருக்கும். இது முதலில் தமிழ், தெலுங்கு, ஹிந்துஸ்தானி ஆகிய மூன்று பாஷைகளில் வெளிவரும் ஆங்கிலத்தில் இரு படங்கள் வெளிவரும். இதன் நீளம் 3000 அடி. முதல் பிரதியை பிரஸிடெண்டு ரூஸ்வெல்டுக்கு காண்பிப்பதற்காக அமெரிக்காவுக்கு அனுப்ப ஸ்ரீ செட்டியார் ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறார். இப் படத்தைக் காட்டுமாறு இத்தாலி பின்லாந்து, ஸ்வீடன் முதலிய பல நாடுகளிலிருந்து அழைப்புகள் வந்திருப்பதாகத் தெரிகிறது. காந்திஜியின் அங்கீகாரம் பெற்றபின் இப் படம் வெளியிடப்படும்.

---

## ஸ்ரீ பாஷ்யம் வக்கீல் தொழில் செய்யக்கூடாது

மைசூர் சமஸ்தானக் காங்கிரஸ் தலைவர். ஸ்ரீ கே. டி. பாஷ்யத்தின் மீது நடைபெற்ற வழக்கில் வக்கில் மைசூர் ஹைக்கோர்ட் பிரதம நீதிபதி ஸ்ரீ பாஷ்யத்தின் பெயரை அட்வகேட்டுகள் ஜாப்தாவிலிருந்து எடுத்து விடும்படியும், அவர் மைசூர் சமஸ்தானத்துக்குள் எந்த கோர்ட்டிலும் வக்கீல் தொழில் செய்யக்கூடாதென்றும் உத்தரவிட்டிருக்கிறார். இதைக் குறித்து ஸ்ரீபாஷ்யம் "இம்முறைகளால் எங்கள்வாயை அடக்கிவிடலாம் என்று சர்க்கார் நினைத்தால் அது பெரும்தவறாகும். யதேச்சாதிகாரத்தை எதிர்த்து கடைசி மூச்சுவரையிலும் போராடுவோம். எங்களுடைய சன்னதுகள் போவதைப் பற்றிக் கவலைப்படவில்லை, எவ்வளவோ தியாகங்களுக்கு நாங்கள் தயாராயிருக்கிறோம். அதில் இதுவும் ஒன்று" என்று பத்திரிகை நிருபரிடம் சொல்லியிருக்கிறார்.



காரைக்குடி ஸ்ரீ கிருஷ்ணாவில் வரப்போகும் Y. V. ராவ், காஞ்சனமாலா நடித்த 'மள்ளி பெள்ளி'யில் ஒரு காக்ஷி

சினிமாக் கதைச்சுருக்கம்

## பிராந்தி புட்டி

கள்ளம் கபடு அற்ற வாலிபனான பகராம் முனிசிபல் ஆபீஸில் வேலை செய்து வருகிறான்.

ஒரு நாள் காலை வழக்கப்படி ஆபீஸுக்குப் போகும் வழியில் கூட்டம் கூட்டமாக ஜனங்கள் போவதையும், வாலண்டியர்கள் அணிவகுத்து தேசியக்கொடிகள் தாங்கி மதுவிலக்கு ஆரம்ப தினத்தைக் கொண்டாடுவதையும் கண்டான். பகராம் ஊருக்குப்புதியவனல்ல; என்றாலும் ஒன்றும் அறியாதவன்.

ஜனங்கள் ஒரு பெரிய மைதானத்தில் கூட்டம் போட்டு சர்தார் வல்லபாய்பட்டேல் தலைமையில் மதுவிலக்குப் பிரசாரம் செய்தார்கள். பகராம் தானும் மதுவிலக்குப் பிரசாரத்தில் ஈடுபடத் துணிந்தான். ஆனால் அதே நிடலில் வேறுபக்கத்தில் ஓர் அழகிய இளம்பெண் மதுவிலக்குப் பிரசாரம் செய்வதைக் கண்டு அன்றே தொண்டர்படையில் சேர்ந்தான்.

ஆனால் 'குடி' என்பது என்ன என்றே தெரியாத அவன் வியாபாரிகள் மூலம் 'வர்ணம் கலந்த தண்ணீர்' என்று அறிந்து ஒரு சோடாக் கடைக்குள் புகுந்து பிரசாரம் செய்து அங்குள்ள பாட்டில்களை உடைத்தான். பின்னர் அங்கு நடந்த கலாட்டாவினால் குடிப்பிசாசு வர்ணம் கலந்த தண்ணீர் அல்ல என்பதைத் தெரிந்து கொள்கிறான்.

பிறகு ஆபீசுக்குச் செல்ல, வேலைக்கு நேரம் சென்று வந்ததற்கு மானேஜர் அவனுக்கு அபராதம் விதிக்கின்றார். கஷ்டத்துடன் வேலை செய்து கொண்டிருக்கும்பொழுது ஒரு ஜனன சர்டிபிகேட்டுக்காக ரிகார்டுகளைத் தேட முயந்சிக்க அங்குள்ள பியூன் கோவிந்தன் ரூமுக்குள் அனுமதிக்க மறுக்க இருவருக்கும் சண்டை நடக்கிறது. அப்பொழுது தற்செயலாக மேலேயிருந்து ஒரு தஸ்தாவேஜ் மூட்டை விழ, அங்கு மறைந்து வைக்கப்பட்டிருந்த பிராந்திப் பாட்டில்கள் உடைந்து விடுகின்றன.

இதை அறிந்த மானேஜர் மதுவிலக்குக்காகப் பயந்து, தான் ரிகார்டு ரூமில் மறைத்து வைத்திருந்த பிராந்திப் பாட்டில்களை பகராம் உடைத்ததால் அவனை வேலையினின்றும் நீக்கிவிடுகிறார்.

வேலையினின்றும் நீக்கப்பட்ட பகராம் வீதியில் போய்க் கொண்டிருக்கும் பொழுது மதுவிலக்குப் பிரசாரம் செய்த பெண்ணாகிய மாலதி, ஆபத்தான நிலையிலிருந்த தனது சகோதரனுடன் (மின்னு) தவிப்பதைக் கண்டு அவனுடன் மின்னுவைத் தூக்கிக்கொண்டு அவள் வீட்டுக்குப் போகிறான். இவள் தந்தையே மானேஜரான கேசவ ராவ்.

பகராமைக் கண்டதும் குடிப் பைத்தியத்திலிருக்கும் கேசவராவ் துரத்திவிடுகிறார். மின்னுவின் மருந்துக்காக பிராந்திக்கு அலைந்தும் கிடைக்காது கடைசியாக ஒளிப்பில் கேசவராவ் குடிப்பதற்காக வைத்திருக்கும் பிராந்தியை எடுத்து வந்து மாலதியிடம் கொடுக்கிறான். இந்த உபகாரத்துக்காக புத்தி வந்த கேசவ ராவ் பகராமுக்கு மறுபடியும் உத்தியோகம் கொடுக்கிறார். மற்றவை திரையில் காணவும்.

---

## திருவாங்கூர் கடல்முத்து

திருவாங்கூர் சமஸ்தானத்தில் கடியபட்டணம் என்ற ஊருக் கருகே கடலிலிருந்து ஒரு முத்துச் சிப்பி போன மாதம் கிடைத்ததாம். இந்தத் துறையருகில் முத்துக் கிடைப்பது இது தான் முதல் தடவை. முத்துச்சலாபம் இருக்கும் இடங்களைத் தேடுவதற்கு சமஸ்தானச் சர்க்கார் ஒரு கட்டுமரக் கோஷ்டியை ஒரு நிபுணரோடு அனுப்பி யிருக்கிறது.

---

இரண்டுநாள் கூடி, பத்து மணி நேரம்போல் பூரணமாக விவாதித்த பிறகு காங்கிரஸ் விஷயாலோசனைக்கமிட்டி தற்போதைய அரசியல் நெருக்கடிபற்றி ராஜன்பாபு பிரேரித்த தீர்மானத்தை அங்கீகரித்தது.

### தீர்மான விபரம்

ஐரோப்பாவில் யுத்தம் சம்பவித்திருப்பதால் ஏற்பட்டுள்ள நெருக்கடியான நிலையை அனுசரித்தும், அது சம்பந்தமாகப் பிரிட்டிஷாருக்குள்ள கொள்கையைக் கருதியும், இதுவரை காரியக்கமிட்டியும், அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியும் நிறைவேற்றிய தீர்மானங்களையும் யுத்த நிலையைப் பற்றி எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளையும் இக் காங்கிரஸ் அங்கீகரிக்கிறது.

### திருத்தங்கள்

ராஜன் பாபுவின் தீர்மானத்துக்கு சுமார் 30 திருத்தங்கள் கொண்டுவரப் பட்டன. இவற்றை மூன்று கூறுகப் பிரிக்கலாம். (1) பிரிட்டிஷ் சம்பந்தத்திலிருந்து அறவே விடுபட வேண்டுமென்றும், சட்டமறுப்புக்குப் பதிலாக புதிய வேலைத்திட்டத்தில் இறங்க வேண்டுமென்றும் கோரி ஸ்ரீ எம். என். ராய் கொண்டுவந்த திருத்தங்கள். (2) உடனே சட்டமறுப்பை ஆரம்பிக்க வேண்டுமென்ற கோரிக்கை. (3) காந்திஜியின் தலைமைப் பதவியில் நம்பிக்கையில்லை யென்று தெரிவிப்பதாக ஒரு திருத்தம்.

### அபேதவாதிகள் ஆதரவு

இப்பொழுது நெருக்கடியான சமயம் ஏற்பட்டிருப்பதால் அசல் தீர்மானத்தை ஆதரிப்பதெனத் தங்கள் கட்சியினர் முடிவு செய்திருப்பதாகக் காங்கிரஸ் அபேதவாதக் கட்சியின் சார்பில் ஜனாப் யூஸப் மேஹரலி தெரிவித்தார்.

காங்கிரஸ் அபேதவாதக் கட்சி சார்பில் ஸ்ரீ மேஹர் அலி கூறியது:

காரியக்கமிட்டியின் தீர்மானத்தை ஆதரிக்க சொஷியலிஸ்ட் நிர்வாக சபை முடிவுசெய்துவிட்டது. தீர்மானத்தின் முக்கிய அம்சங்களை நாங்கள் ஒத்துக்கொள்ளுவதே அதனைஆதரிப்பதற்குக் காரணம். ஏகாதிபத்திய யுத்தத்தில் சம்பந்தத்தை பூர்ணமாக ரத்துசெய்து கொள்ள அத்தீர்மானம் வற்புறுத்துகிறது. குடியேற்ற நாட்டந்தஸ்து நிராகரிக்கப்படுகிறது. வயது வந்தவர் வோட்டுரிமை அடிப்படையில் அரசியல் நிர்ணயசபை கூட்டப்படவேண்டுமென்பது வற்புறுத்தப்படுகின்றது. சமஸ்தானப் பிரஜைகளின் உரிமைகள் வற்புறுத்தப்படுகின்றன. அடுத்தபடி சட்டமறுப்பு இயக்கம் நடக்குமென்றும் அத்தீர்மானம் கூறுகிறது. இந்நெருக்கடியில் நமது வித்யாசங்கள் முக்கியமல்ல. ஒன்றாக முன்னேறுவதே முக்கியம்.

### படேலின் கர்ஜனை

விவாதத்தில் கலந்து கொண்ட படேல் வெகு உக்கிரமாகப் பேசினார். காந்திஜி நமக்குத் தலைவராக வாய்த்திருப்பது நாம் செய்த பெரும் பாக்கியமென்று கூறி, ஆகவே அவர் காட்டும் வழியை அலக்ஷ்யம் செய்யாமல் அவரிடம் பரிபூர்ணநம்பிக்கை வைத்து நடக்கும்படி அனைவரையும் கேட்டுக் கொண்டார்.

### தீர்மானத்தின் வெற்றி

சுமார் 35 பேர்கள் விவாதத்தில் பங்கெடுத்துக் கொண்டனர். ராஜன் பாபு, எல்லோரையும் ஒற்றுமைப் படும்படியும் திருத்தங்களை வாபீஸ் பெறும்படி வேண்டினார். திருத்தங்களில் சில வாபீஸ் பெறப்பட்டன. மற்றவை ஓட்டுக்கு விடப்பட்டுத் தோற்றன. ராஜன் பாபுவின் தீர்மானம் பெருத்த கரகோஷத்தினிடையே நிறைவேறியது. பத்துப்பேர்கள்தான் எதிராக ஓட்டு செய்தனர்.

விஷயாலோசனைக் கமிட்டி

# ராஜன்பாபு தீர்மானம் வெற்றி

## மகாத்மாவின் உறுதிமொழி

★

### காந்திஜியின் கவனம்

இன்றையக் கமிட்டிக் கூட்டத்தில் காந்திஜி பிரசன்னமாயிருந்து விவாதத்தில் மிகுந்த அக்கரை காட்டினார். தாம் ஒன்றும் செய்யாமல் சும்மா யிருப்பதாக பிரஸ்தாபித்து மெம்பர்களில் பலர் தம்மைத் தாக்கிப் பேசியதை அவர் வெகுகவனமாகக்கேட்டு, அப்பொழுது சிரித்தார். பஞ்சாப் பிரதிநிதியான ஸ்ரீ சுவாமி பேசுகையில் காந்திஜியை சின்ன மனிதர் என்று குறிப்பிட்டு, "தங்களைப் பிடித்து ஒரு ஆட்டு ஆட்டலாம் போல் எனக்கு ஆசையாயிருக்கிறது" என்று சொன்னார் "ஆஹா! தாராளமாகச் செய்யுங்களேன்" என்றார் மகாத்மா சிரித்துக் கொண்டே. "நீங்கள் காங்கிரஸில் நாலணா மெம்பர்கூட அல்ல. ஏன் ஒரு மெம்பராகச் சேர்ந்துகொள்ளக் கூடாது" எனக்கேட்டார். எல்லோரும் சிரித்தார்கள்.

மார்ச்மீ 18ந் தேதி கூடிய விஷயாலோசனைக் கமிட்டியில் டாக்டர் ராஜன் பாபு கொண்டுவந்த தீர்மானம் நிறைவேறிய பின், காந்திஜி முக்கியமானதொரு பிரசங்கம் செய்தார் அதில் குறிப்பிட்டதாவது:—

"நீங்களாக என்னை உங்கள் தளகர்த்தராகத் தெரிந்தெடுத்துக்கொண்டீர்கள். குறுக்கே ஒரு வார்த்தையும் சொல்லாமல் நான்சொன்னபடி நீங்கள் கேட்காவிட்டால் நான் வெற்றியடைய முடியாது. நான் குறிப்பிடும் நிபந்தனைகளை நீங்கள் பூர்த்திசெய்ய வேண்டும். இல்லையானால் நான் போராட்டத்தை ஆரம்பிக்கமுடியாது. என் நிபந்தனைகள் உங்களுக்குப் பிடிக்காவிட்டால் வேறு ஒரு தளகர்த்தரை நீங்கள் தாராளமாக நியமித்துக் கொள்ளலாம். போராட்டத்தைத் துவக்க விரும்பும் எவரையும் நான் தடுக்கவில்லை. ஆனால் காங்கிரஸ் சார்பாகப் போராட்டத்தை துவக்கவேண்டுமானால் அதன் தலைவர் குறிப்பிடும் கட்டுக்கடங்கி நடக்க யாவரும் சித்தமாயிருக்கவேண்டும்.

இவ்விதம் நடக்க இஷ்டப்படாதவர்கள் காங்கிரஸை விட்டுப்போய், அதற்கு எதிராகக் கிளர்ச்சி செய்து, வெளியே போய், போராட்டத்தை ஆரம்பிக்கலாம். நான் உங்களுக்குத் தலைவராயிருந்து காரியங்களைக்கவனிக்க வேண்டுமானால் நீங்கள் என்னிடம் நம்பிக்கைகொண்டு நான் காட்டும் வழியில் நடக்க வேண்டும். நான் ஏதோ சமரஸமாகப் போய்விடுவேன் என்ற சந்தேகம் உங்களுக்கு இருக்கலாம். ஆனால் நாட்டுக்குப் பாதகம் நேரக்கூடிய வழியில் நான் சமாதானம் செய்து கொள்ளமாட்டேன், நீங்கள் மனப்பூர்வமாக எனக்கு ஆதரவு அளித்தால் ஒரு மாதத்துக்குள் நாம்கோரிய பலன் கிட்டிவிடும். அஹிம்சையின் மூலம் நாமடைந்த சக்தியைக் கைவிடமாட்டேன். அதற்காக என் உயிரையும் கொடுப்பேன். அஹிம்சையின் சக்தியை நீங்கள் பூர்ணமாக அறியமாட்டீர்கள். நான் சொன்னபடிக் கேட்டால் அதன் அருமை தெரியும். சத்தியம்தான் எனக்குத் தெய்வம்.

---

### காங்கிரஸ் மாளிகை நிதி வசூல்

திருப்பத்தூர் தாலுகா காங்கிரஸ் கமிட்டி மூலம் சென்னை காங்கிரஸ் மாளிகை புனர்நிர்மாண நிதிக்கு ஷை தாலுகாவிலிருந்து மொத்தம் ரூ. 208-6-0 வசூல் செய்யப்பட்டிருக்கிறது. கானாடுகாத்தான், நேமத்தான் பட்டி, பள்ளத்தூர், கண்டனூர், மாநகரி, மூறையூர், கண்டிரமாணிக்கம், நாச்சியாபுரம், ஆகிய ஊர்களிலிருந்து முறையே ரூ 73, ரூ 10-4, 18-10 ரூ 54-0, ரூ 21, ரூ 7, ரூ 18, ரூ 6-8. சென்னை காங்கிரஸ் மாளிகையின் புது நிர்மாணத்திற்கு வசூலாயிருக்கிறது.



### காரைக்குடி

#### சித்த வைத்திய பிரசார சபை

இச்சபையின் 8-வது கூட்டம் 17-3-40 மாலை 7 மணிக்கு ஸ்ரீ மெ. சு. தி. தண்ணீர்மலைச் செட்டியார் தலைமையில் நடைபெற்றது. தலைவர் சித்த வைத்திய பிரசாரசபையின் சார்பாக எல்லா வைத்தியர்களும் ஒன்று சேர்ந்து மருந்துகள் சேகரித்து விற்பனைக்குத் தயாராக்கவேண்டுமென்றும், வைத்தியர்களுக்கிடையே ஒற்றுமை நிலவவேண்டுமென்றும், அடிக்கடி அவர்கள் கூடியாலோசிக்கவேண்டுமென்றும் சொன்னார். 'ஊழியன்' உதவி ஆசிரியர் ஸ்ரீ எஸ். கே. ஸ்வாமி சித்த வைத்தியத்தைப்பற்றிப் பேசுகையில் தமிழ்நாட்டார் பண்டைக் காலந்தொட்டே வைத்தியத் தொழிலில் வல்லுநர்களாய் இருந்தார்களென்றும் சித்த புருஷர்களான அகத்தியர், போகர் முதலியோர் வைத்திய முறையில் மகா பெரிய நிபுணர்களென்றும், நாட்டுவைத்தியத்திற்குத் தக்க ஆதரவு செய்யவேண்டுமென்றும் குறிப்பிட்டார். ஸ்ரீ பழ. மெ. பெரி. மெய்யப்பா சுருக்கமாகத் தர்ம வைத்தியத்தின் மேன்மையைக் குறித்துப் பேசியபின் கூட்டம் முடிந்தது.

#### முத்துப்பட்டணம் முனிசிபல் பெண்பாடசாலை

ஸ்கூல் பெற்றோர் சங்கக் கூட்டம் 16—3—40 முனிசிபல் கமிஷனர் ஸ்ரீ T. புருஷோத்தம முதலியார் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்திற்கு பல தாய்மார்களும் தகப்பன் மார்களும் வந்திருந்தனர். மாணவர்கள், சம்பாஷணை, பாட்டு, நடிப்பு, கும்மி, கோலாட்டம் ஆகியவைகளை நடித்துக் காட்டினர். ஸ்ரீமான்கள் விஸ்வநாதய்யர், கந்தன், ஆத்மநாதய்யர், வேலாயுதம் பிள்ளை முதலியோர்கள் பெண் கல்வி, உபாத்திமைத் தொழில், பெற்றோர் கடமை என்பதை பற்றி விரிவாக உபன்யாஸம் செய்தனர். வந்தனோபசாரத்துடன் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

#### சிவன்கோவில் முனிஸிபல் ஸ்கூல்

ஷை ஸ்கூல் பெற்றோர் சங்கக்கூட்டம் நாளது மீ 21—3—40 வியாழக்கிழமை மாலை 5 மணிக்கு நடைபெறும்.

---

#### புல்லைத் தின்ன புரொபஸர் சிபார்சு

புல்லைப் பற்றி ஏழு வருஷங்களுக்கு மேல் ஆராய்ச்சி செய்த டோகியோ புரொபஸர் எடட்ஸுஜிரோ ஹாரா புல்லில் வைட்மின் 'பி' இருக்கிறதென்றும் ரொம்ப சத்துள்ளதென்றும் அரிசியை விட சுலபமாக ஜீரணிக்கக் கூடியது என்றும் கோதுமை மாவு, ஸோயாபசை இவைகளுக்குப் பதிலாக உபயோகிக்கலாமென்றும் ஜனங்கள் புல்லைச் சாப்பிட்டால் இளந்தோற்றத்தைக் காப்பாற்றலாம் என்றும் அவர் கூறுகிறார்.

## கிராமங்களே தேசத்தின் ஜீவநாடி

மகாத்மாவின் உபதேசம்

மகாத்மா காந்தி மார்ச்சு 14-ந் தேதி ராம்கார் காங்கிரஸ் முகாமில் காதிப் பொருட் காக்ஷியைத் திறந்து வைத்து கூறியதாவது:—

பூர்ணசுதந்திரத்தின் திறவுகோல் நமது கையிலேயே இருக்கிறது. குடிசைத் தொழில் புனருத்தாரணம் செய்வதுதான் அந்தத் திறவுகோல். சுயராஜ்யம் பெறுவதற்கு யுத்தம் புரியவேண்டிய தேவையில்லை. வகுப்பு ஒற்றுமையையும் சுயராஜ்யத்தையும் அமைதியான முறையில் மிகவும் சுலபமாக பெற்றுவிடமுடியும். இத் தேசத்தின் பொருளாதார நிலையை சீர்படுத்துவதற்கான அபார சக்திகள் 7லக்ஷம் கிராமங்களிலுமிருக்கின்றன. தங்களிடமுள்ள சக்தியையும் திறமையையும் கிராமவாசிகள் மனதில் பதிய வைக்க வேண்டும். கிராமவாசிகள் வேலையில்லாமல் திண்டாடுவதற்கும் சுரண்டப் படுவதற்கும் அவர்களுடைய அறியாமைதான் காரணம். இந்த அறியாமையைப் போக்க முயல வேண்டும். அவர்கள் எந்த முறையில் சுரண்டப் பட்டுவருக்கிறார்களென்பதையும், வெளியுலகம் என்ன நிலைமையில் இருக்கிறது என்பதையும் அவர்களுக்கு எடுத்துக்கூற வேண்டும். இந்த சுரண்டலைத் தடுப்பதற்குச் சரியான வழி குடிசைத் தொழில்; குறிப்பாக ராட்டினத்தைப் புனருத்தாரணம் செய்வதுதான். குடிசைத் தொழில் முன்னேற்றத்தில் பணக்காரர்களின் பொறுப்பு மிகவும் அதிகம். அவர்கள் குடிசைத் தொழில் பொருள்களை விலைக்கு வாங்கி ஆதரவு அளிக்க வேண்டும். அதன் மூலம் கிராம வாழ்க்கையை செழிப்புள்ளதாகச் செய்துவிட முடியும். சென்ற 50வருஷ காலமாக காங்கிரஸ் இந்த உதவியையளித்து வருகிறது.

பம்பாயோ, அல்லது கல்கத்தாவோ இந்தியாவின் உண்மையான சின்னங்கள் அல்ல. இந்தியாவிலுள்ள 7லக்ஷம் கிராமங்கள்தான் இந்நாட்டின் உண்மையான பிரதிநிதி. தங்களிடம் மறைந்து கிடக்கும் அபார சக்தியை அவர்களை உணரும்படி செய்ய வேண்டும். அவர்களுக்குத் தேவையான பொருள்களை அவர்களே உற்பத்தி செய்துகொள்ள முடியும் என்பதையும் அவர்களுக்குப் போதிக்க வேண்டும். கதர், குடிசைத் தொழில் சங்கத்தின் வேலைத்திட்டங்களை வெற்றிகரமாக நடத்திவந்தால் இதை வெகுசுலபமாக சாதித்துக் கொள்ள முடியும்.

மூலக் கல்வி முறை, வகுப்புப் பிரச்னையை மிகவும் சுலபமாக தீர்த்துவிடும். இதுவரை அந்தத் திட்டம் வேலை செய்து வந்த அனுபவத்திலிருந்தே இந்த உண்மை நன்கு வெளிப்பட்டிருக்கிறது. ஏதோ கக்ஷி நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டு அந்தக் கல்விமுறை வகுக்கப் படவில்லை. வகுப்பு வாதத்துக்கு அந்தக் கல்வி முறையில் கொஞ்சமேனும் இடமில்லை. இந்தக் கல்வி முறையானது ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமைக்கு உபயோகமாயிருக்குமென்பது எனது திடமான அபிப்பிராயமாகும். இந்தியா விடுதலைபெற வேண்டுமானால் ஒவ்வொரு இந்தியனும் குடிசைத் தொழிலில் கவனம் செலுத்தவேண்டும்.

## கம்பராமாயணம் உலகில் சிறந்தது

### ஸ்ரீ ஜவஹர் கூறியிருக்கிறார்

★

சிறைப்பட்டிருக்கும் பொழுது பண்டித ஜவஹர் தனது குமாரி இந்திராவுக்கு எழுதிய கடிதங்களிலொன்றில் இராமாயணக்கதையைப் பற்றிச் சொல்லியிருப்பதோடு கம்பராமாயணத்தின் பெருமையைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார். உலகிலேயே சிறந்த நூல்களில் கம்பராமாயணமும் ஒன்று என்பது பண்டிதரின் அபிப்பிராயமாகும். அந்த பாகத்தைக் கீழே தருகிறோம்:

அன்புள்ள இந்திரா!

வேதகாலத்திற்குப் பின்னர் புராண காலம் ஏற்பட்டது. இக்காலத்தில் வீரர்களின் சரிதங்களைப்பற்றி இரு பெருங்காவியங்கள் எழுதப்பட்டதால் புராணகாலமென இதை வழங்கத் தொடங்கினார்கள். இவ்விரண்டு பெருங்காவியங்களும் இராமாயணம், மஹா பாரதம் என்பனவாகும். இந்த இரண்டு காவியங்களைப்பற்றி நீ கேட்டிருப்பாய்.

#### இராமாயணம்

இராமாயணம் என்பது இராமர், சீதை என்னும் இருவரின் சரிதத்தைக் குறிப்பிடுவதோடு இலங்கை அரசனாயிருந்த இராவணனை இராமர் எதிர்த்துப் போராடிய வரலாற்றையும் விளக்குகின்றது. முதல் நூல் வால்மீகி என்பவரால் சமஸ்கிருதத்தில் எழுதப்பட்டது. பின்னர் பல பாஷைகளிலும் வெவ்வேறு விதமாக இந்த நூலை எழுதினார்கள். ஹிந்தியில் துளசிதாஸரால் எழுதப்பட்ட 'ராமசரித்திர மானஸம்' என்ற நூலும் தமிழில் கம்பன் என்ற கவியால் எழுதப்பட்ட இராமாயணமும் குறிப்பிடத்தக்கவை.

#### வானரங்கள் யார்?

தென்னிந்தியாவில் ராமர் வானரங்களின் உதவியைப் பெற்றார் என்றும் வானர சைன்யத்திற்குத் தலைவராக அநுமார் இருந்ததாகவும் இராமாயணத்தில் எழுதப் பட்டிருக்கிறது. இராமாயணம் ஆரியர்களுக்கும் தெற்கேயிருந்தவர்களுக்கும் நடந்த யுத்தங்களைப் பற்றிக் கூறும் ஓர் உண்மை நூலாகயிருக்கலாம். ராவணன் தெற்கேயிருந்தவர்களின் தலைவனாகயிருந்திருப்பான். தென்னாட்டிலிருந்த கறுப்பு மனிதர்கள் குரங்குகளெனக் கருதப் பட்டிருக்கலாம். இராமாயணத்தில் அழகிய கதைகள் பலவிருக்கின்றன. அவைகளைப் பற்றி இங்கு விவரிக்க முடியாது. நீயே அவற்றைப் படித்துக் கொள்ள வேண்டும்.

நடராஜா டாக்கீஸில் நடக்கும் "ஹரிஹரமாயா"வில் ஒரு காட்சி

## மதிப்புரை

### சிலம்புச் செல்வம்

ஐம்பெருங் காவியங்களிலொன்றான சிலப்பதிகாரம் இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் வழங்கிய அரிய பழந்தமிழ் நூல். "நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம் என்றொரு மணி ஆரம்படைத்த தமிழ்நாடு" எனப் பாடினார் ஸ்ரீ சுப்ரமண்ய பாரதியார். ஆனால் சிலப்பதிகாரத்தை எல்லோரும் எளிதில் படித்துத் தெரிந்து கொள்ளமுடியாது. ஸ்வாமி சுத்தானந்த பாரதியார் தமது இயற்கையான எளிய இனிய நடையில் அதனை 'சிலம்புச் செல்வ'மாக தமிழர்கட்கு எழுதி உதவியிருக்கிறார். ஸ்வாமி சுத்தானந்த பாரதியாரின் பேனா முனையிலிருந்து வெளியாகும் பல அரிய நூல்களைத் தமிழ் நாட்டுக்கு உதவும் சீரிய தொண்டில்ஈடுபட்டு வரும் அன்புநிலையத்தார்கட்கு தமிழ்நாடு என்றும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறது.

பழந்தமிழரின் ஆட்சிமுறை, பெண்மையின் பெருமை, தமிழரின் சிறப்பு, நடனத்தின் இலக்கணம் முதலியவைகளை விரிவாக சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டிருக்கின்றன. பாரதியார் 'சிலம்புச் செல்வ'த்தில் இவையனைத்தையும் தெளிவாக விளக்கியிருக்கிறார்.

இந்நூலின் ஆசிரியர் "யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல், வள்ளுவன் போல், இளங்கோவைப்போல், பூமிதனில்யாங்கணுமே பிறந்ததில்லை" என்று சுப்ரமண்ய பாரதியாரால் குறிப்பிடப்பட்ட கவிஞர்களிலொருவரான இளங்கோவடிகள் ஆகும்.

சிலப்பதிகாரத்தைப் படிப்பதற்கு முன் சிலம்புச்செல்வத்தை படிப்பது ரொம்பவும் உதவியாயிருக்கும். இந்நூலில் முதலாவது சேரமான், பத்தினிக் கடவுள், இளங்கோவடிகள் ஆகியவர்களின் அழகிய படமொன்று காணப்படுகிறது. நல்ல காகிதத்தில் அழகாய் பிழையின்றி அச்சிடப்பட்டிருக்கிறது. க்ரௌன் சைஸ் ஒன்றுக்கு எட்டு அளவில் 310 பக்கங்கள் கொண்ட இந்நூலின் விலை ரூ 1—12—0. வேண்டுவோர் "அன்பு நிலையம். இராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா, என்ற விலாசத்திற்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

### காந்திஜீ மீது படுகிழவியின் பக்தி

ராம்காரில் கதர் கண்காட்சியைத் திறந்துவைத்து காந்திஜீபிரசங்கம் செய்து முடித்ததும் அக்கூட்டத்திலிருந்த ஒரு தொண்டுக் கிழவி தன் கையினாலேயே தயார் செய்த ஒரு கதர் வஸ்திரத்தை காந்திஜீயிடம் கொடுத்தாள். மகாத்மா அதை மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்டார்.

## பஞ்சாங்கம்

| பர்மா. | இங் | தமிழ். | வாரம். | பிரமாதி-ஞூ இங்-1940. பர்மா-1302. |
|---|---|---|---|---|
| 12 | 21 (1940 மார்ச்-மீ) | 8 (பிரமாதி-ஞூ பங்குனி-மீ) | வியா | துவா-6-49. ஆயி-0-14. சி.அமிர்தயோகம். |
| 13 | 22 | 9 | வெள் | திர-1-9. பூர-52-16 சித்தயோகம். |
| 14 | 23 | 10 | சனி | ○பௌ-49-16, உத்தி-8-47. மரணயோகம். |
| 15 | 24 | 11 | ஞாயி | பிர-43-32. அஸ்-44-20. அ. சித்தயோகம். |
| 1 | 25 | 12 | திங் | துவி-36-5. சித்-40-44. மரணயோகம். |
| 2 | 26 | 13 | செவ் | திரு-33-12, ஸ்வா-37-43. சித்தயோகம். |
| 3 | 27 | 14 | புதன் | சது-29-0. விசா-35-23. சித்தயோகம். |
| 4 | 28 | 15 | வியா | பஞ்-25-44, அனு-33-58. சித்தயோகம். |

## நடப்பு வட்டி விகிதங்கள்

| மாதம். | நாள். | சென்னை | ரெங்கூன் | பினங்கு | சிங்கப்பூர் | செய்கோன் |
|---|---|---|---|---|---|---|
| வெகுதானிய மாசி | 30 | 0 6 6 | 0 4 6 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| பங்குனி | 31 | 0 6 6 | 0 4 9 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| பிரமாதிசித்திரை | 31 | 0 6 9 | 0 4 0 | 0 4 6 | 0 4 3 | 0 4 0 |
| வைகாசி | 31 | 0 6 6 | 0 5 0 | 0 4 6 | 0 4 3 | 0 4 0 |
| ஆனி | 32 | 0 6 6 | 0 5 6 | 0 4 3 | 0 4 3 | 0 4 0 |
| ஆடி | 31 | 0 6 0 | 0 4 0 | 0 4 3 | 0 4 3 | 0 4 0 |
| ஆவணி | 31 | 0 5 6 | 0 4 0 | 0 4 3 | 0 4 3 | 0 4 0 |
| புரட்டாசி | 31 | 0 5 6 | 0 4 0 | 0 4 3 | 0 4 3 | 0 4 0 |
| அற்பசி | 29 | 0 5 6 | 0 4 0 | 0 4 3 | 0 4 3 | 0 4 0 |
| கார்திகை | 30 | 0 5 6 | 0 4 0 | 0 4 6 | 0 4 3 | 0 4 0 |
| மார்கழி | 29 | 0 5 9 | 0 4 6 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| தை | 30 | 0 6 0 | 0 5 0 | | 0 4 0 | 0 4 0 |
| மாசி | 30 | 0 6 0 | 0 4 9 | | | |

REGNO. M. 3888 | 12 PAGES | PRICE 1 ANNA

SUBSCRIPTIONS
Inland Annual ... Rs. 5
Burma Annual ... Rs. 6
Foreign Annual ... Rs. 7

# ஊழியன்

ADVERTISEMENTS
One Inch S. C. per insertion As. 8
Court Notice per Inch Re. 1
Long Standing Advertisements given Concessions

The "Oolian", A Nationalist Tamil Weekly

VOL. 19 | KARAIKUDI, 21ST MARCH 1940, THURSDAY | NO. 38

## சென்னை ரேடியோ

### மார். 21-உ வியாழன்

4-0 ஆம்பூர் சகோதரிகள்-பாட்டு, 5-20 வி. ஆர். அனந்த பாகவதர்-பாட்டு, 6-30 மதராஸ் யுனைடெட் ஆர்டிஸ்ட்ஸ் கார்பொரேஷன் வாத்யக் கோஷ்டி, 7-50 செம்மங்குடி ஸ்ரீநிவாஸய்யர்-பாட்டு, 9-30 எம். ஏ. கல்யாண கிருஷ்ண பாகவதர்-வீணை.

### 22-உ வெள்ளி

4-0 எஸ். மீனாக்ஷிபாணி-பாட்டு, 5-20 மன்னார்குடி ராஜகோபால பிள்ளை-பாட்டு, 6-30 ஸ்ரீமதி எம். எஸ். மோஹனாம்பாள்-பாட்டு, 7-0 வாராவார விமர்சனம்-வி. ஆர். ஸ்ரீநிவாஸன் தமிழில் பேசுவார், 7-50 மன்னார்குடி ராஜகோபால பிள்ளை, 7-30 ஸ்ரீமதி கே. லலிதா-புல்லாங்குழல்.

### 23-உ சனி

5-20 ஜி. கல்யாண ராமய்யர்-பாட்டு, 6-05 வி. எஸ். சாரதாம்பாள்-பாட்டு 7-10 அ. இ. ரே. வித்வான்-புல்லாங்குழல், 7-50 ஏ. ஜே. பாண்டியனும் வாத்யக் கோஷ்டியும், 8-10 ஸ்ரீமதி பங்களூர் நாகரத்தினம்மாள்-பாட்டு.

### 24-உ ஞாயிறு

4-0 கே. எஸ். நாகராஜன்-பாட்டு, 5-20 ஆனை வைத்யநாதய்யர்-பாட்டு, 6-05 முடிகொண்டான் சபாபதி அய்யர்- பாட்டு, 7-0 'தமிழில் ஒரு தொடர்கதை'-வ-ரா, 7-50 ஸ்ரீமதி சாரநாயகி-பாட்டு, 8-30 ஆர். கே. வெங்கடராம சாஸ்திரி-பிடில், 9-30 முடிகொண்டான் சபாபதி அய்யர், 10-0 எஸ். ராம அய்யர்-புல்லாங்குழல்.

### 25-உ திங்கள்

4-0 மாயவரம் ஆர். கணேசய்யர்-பாட்டு' 5-20 வரகூர் முத்துஸ்வாமி அய்யர்-பிடில், 7-50 செம்பை வைத்தியநாத பாகவதர்-பாட்டு,

### 26-உ செவ்வாய்

5-20 கே. ஏ ராதாகிருஷ்ண பிள்ளை-பாட்டு. 6-30 'வேதாள உலகம்' ஒரு தமிழ் நாடகம்- பி. சம்பந்த முதலியார் எழுதியது, 7-0 மஹாபாரதக் கும்மி, 7-50 கிரனூர் ஸ்ரீமதி கே. எஸ். ஜெயலக்ஷ்மி-புல்லாங்குழல் 8-30 கே. ஏ. ராதாகிருஷ்ண பிள்ளை, 9-30 கிரனூர் ஸ்ரீமதி கே. எஸ். ஜெயலக்ஷ்மி, 10-0 வி. சேதுராமய்யா-பிடில்.

### 27-உ புதன்

4-0 மினக்கல் சுப்ரமணியம்-பாட்டு, 5-20 ஏ. பார்த்தசாரதி நாகஸ்வரம், 6-05 பண்ருட்டி சகோதரிகள்-பாட்டு, 7-50 பாருபள்ளி ராமகிருஷ்ணய்யா-பாட்டு, 9-30 த்வாரம் நரசிங்கராவ்-பிடில்.

---

## திருச்சி ரேடியோ

### மார். 21-உ வியாழன்

5-20 ஈரோடு என். ஆர். கிருஷ்ண அய்யர்-புல்லாங்குழல், 6-30 மருங்காபுரி கோபாலகிருஷ்ணய்யர்-பிடில். 7-0 'பீட் கான்ஸ்டபிள்' வ. ராமஸ்வாமி வாழ்க்கையைப் பற்றிப் பேசுவார், 7-50 என். வி. நாராயண அய்யர்-பாட்டு, 8-30 மருங்காபுரி கோபால கிருஷ்ணய்யர், 9-20 செய்திகள், 9-45 குமாரிகள் காமாக்ஷியும், விஜயலக்ஷ்மி நாராயணய்யரும்-பாட்டு.

### 22-உ வெள்ளி

5-20 பி. சிவசுப்ரமண்ய பிள்ளை-நாகஸ்வரம், 6-30 மன்னார்குடி ஆர். சாம்பசிவன்-பாட்டு, 7-0 'உலக விவகாரங்கள்,' 7-50 பி. சிவசுப்ரமண்ய பிள்ளை, 8-30 'சபதமும்-காதலும்' ஒரு சிறு நாடகம் கே. பி. வெங்கடாசலம் எழுதியது, 8-45 ஸ்ரீமதி நீலம்மா கடம்பி-வீணையும், பாட்டும், 9-20 செய்திகள், 9-45 ஸ்ரீமதி நீலாவதி கடம்பி.

### 23-உ சனி

5-20 வி. என். ராவ்-வீணை, 6-30 கிவளூர் எஸ். மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை-பாட்டு, 7-0 'உலகப்போக்கு' ஏ. என். சிவராமன், 7-50 பாபா கே. எஸ். வெங்கடராமய்யர்-பிடில், தஞ்சாவூர் ராமதாஸ் ராவ்-மிருதங்கம், 8-30 கிவளூர் எஸ். மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை, 9-20 செய்திகள், 9-45 பாபா கே. எஸ். வெங்கடராமய்யர்-பிடில், தஞ்சாவூர் ராமதாஸ் ராவ்-மிருதங்கம்.

### 24-உ ஞாயிறு

5-20 ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி நடராஜன்-பாட்டு, 6-05 'கிராம நாடகசபை அல்லி கர்வபங்கம்'-நாடகம், 6-30 ஸ்ரீமதி டி. சூர்யகுமாரி பாட்டு, 7-0 'கலவை' என்பதுபற்றி வி. சாரநாதன் பேசுவார், 7-50 கே. எஸ். நாராயணய்யங்கார்-கோட்வாத்யம், 9-20 செய்திகள்.

### 25-உ திங்கள்

5-20 பெரம்பலூர் என். அங்கப்ப பிள்ளை-நாகசுரம், 6-30 ஸ்ரீமதி எஸ். ரங்கநாயகி-வீணையும், வாய்ப்பாட்டும், 7-0 'சண்டைக்குள் சண்டை' ஒரு நிகழ்கால சித்திரம் 7-50 ரேடியோக் கச்சேரி பல்லடம் சஞ்சீவி ராவ்-புல்லாங்குழல், பாபா கே. எஸ். வெங்கடராமய்யர்-பிடில், கோயம்புத்தூர் ராஜப்பையர்-மிருதங்கம், 9-20 செய்திகள், 9-45 ஸ்ரீமதி எஸ். ரங்கநாயகி-வீணையும் வாய்ப்பாட்டும், எஸ். பார்த்தசாரதி-பிடில்.

### 26-உ செவ்வாய்

5-20 திருக்கோடிக்காவல் ஆர். கிருஷ்ணமூர்த்தி அய்யர் பிடில், 6-30 ஸ்ரீமதி காமு அம்மாள் வீணை, 7-50 பாலக்காடு ராமபாகவதர் பாட்டு, 8-30 'எமபட்டணத்தில் ஒருநாள்' பி. ஈ. சோமசுந்தரம் எழுதிய ஒரு கற்பனை நாடகம், 8-50 ஸ்ரீமதி காமு அம்மாள், 9-20 செய்திகள், 9-45 பாலக்காடு ராமபாகவதர்.

### 27-உ புதன்

5-20 பட்டமங்கலம் சாம்பசிவ அய்யர் வீணை, 6 30 ஏ. சுப்ரமண்யம் பாட்டு, 7-00 'உணவுப் பொருள்கள்' வி. டி ராஜேசுவரன் பேசுவார், 7-50 ரேடியோ கச்சேரி: அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் பாட்டு, வித்வான் ராஜமாணிக்கம் பிள்ளை பிடில், பழனி சுப்பிரமண்ய பிள்ளை மிருதங்கம், 9-20 செய்திகள், 9-45 ஏ. சுப்ரமண்யம் பாட்டு.

---

## புகையிலை வரிக்குத் திருத்தங்கள்

### சென்னை சர்க்கார் அறிக்கை

புகையிலை வரிக்குச் சென்னை சர்க்கார் பின்கண்ட திருத்தங்களை செய்ய உத்தேசித்திருக்கிறார்கள்.

(1) வருஷத்திற்கு ரூ. 400-க்கும், அதற்கு குறைவாகவும் விற்பனையுள்ளவர்கள், அரை வருஷ வரியை முன்னதாகவே கட்டிவிட வேண்டும்.

(2) தங்களுடைய உற்பத்திக்கு உபயோகித்துக்கொள்ள புகையிலை வாங்குவதற்கு, உற்பத்திக்காரர்கள் தனி லைசென்ஸ் வாங்கும் நிர்ப்பந்தம் ரத்தாகவேண்டும்.

(3) புரோக்கர்களின் லைசென்ஸ் கட்டணம் ரூ. 10ஆக குறைக்கப்படவேண்டும்.

இந்தத் திருத்தங்கள் கெஜட்டில் பிரசுரிக்கப் படுகின்றன. ஆக்ஷேபனைகளிருப்பவர்கள் மார்ச் 25-ந் தேதிக்குள் சர்க்காருக்கு எழுத வேண்டும்.

---

## பிரிட்டனில் யுத்தச்செலவு தினசரி 65 லக்ஷம் பவுன்

கடற்படை, ராணுவம், விமானப் படை, சப்ளை ஆகியவைகளுக்காக சுமார் 40 லக்ஷம் பவுன்கள் செலவாகின்றன வென்று ஸர். ஜின்னுஸைமன் பார்லிமெண்டில் அறிவித்தார். கடனுக்கு வட்டி, சமூக நன்மைக்கான செலவுகள் முதலிய எல்லாவற்றையும் சேர்த்துப் பார்த்தால், தினசரி 65 லக்ஷம் பவுன்கள் செலவாகின்றன என்று சொன்னார்.

---

## கலித்தொகை மகாநாடு

சைவசித்தாந்தக் கழகத்தைச் சேர்ந்த தென்னிந்தியத் தமிழ்ச் சங்கத்தார் கூட்டிய கலித்தொகை மகாநாடு மார்ச்மீ 9, 10-ம் நாட்களில் சென்னையில் கோவிந்தப்ப நாயக்கர் பள்ளிக்கூட மண்டபத்தில் கூடியது, ஸ்ரீ ந. மு. வேங்கிடசாமி நாட்டார் தலைமை வகித்தார். ஸ்ரீமான்கள். எஸ். முத்தைய முதலியார், எஸ். வையாபுரிப் பிள்ளை, வி. கல்யாண சுந்தர முதலியார் முதலியவர்கள் வந்திருந்தனர். மகாநாட்டுத் தலைவர் ஸ்ரீ நாட்டார் கலித்தொகைப் பாட்டுகள் அகப் பொருள்களைப் பற்றியன வென்றும் பண்டைத் தமிழர் மணமுறை உண்மைக் காதலை அடிப்படையாகக் கொண்ட தென்றும் கூறினர். மற்றும் சில வித்துவான்கள் பேசினர்கள். சென்னையில் சங்க நூல் மண்டபம் ஒன்று அமைக்க உடனே ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்றும் இதர சங்க இலக்கியங்கள் சம்பந்தமாக மகாநாடுகள் கூட்டவேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேறின. இம் மகாநாட்டின் சொற் பொழிவுகளையெல்லாம் 'கலித்தொகைச் சொற்பொழிவுகள்' என்னும் பெயருடன் ஒரு நூலாக அச்சிட்டுக் கூட்டத்திலேயே எளிய விலைக்கு வழங்கினார்கள்.

---

## திருவாங்கூரில் காங்கிரஸ்காரர்களுக்குத் தண்டனை

1938ல் திருவிதாங்கூர் சமஸ்தானக் காங்கிரஸ் சட்டமறுப்பின்போது கைது செய்யப்பட்ட சமஸ்தானக் காங்கிரஸ் தலைவராயிருந்த ஸ்ரீ ஆர். வி. கேசவனுக்கும் இன்னும் ஐவருக்கும் மூன்று வருஷக் கடுங்காவல் தண்டனையும் ரூ. 50 அபராதமும் தவறினால் மேலும் 2 மாத சிறைத் தண்டனையும் விதிக்கப்பெற்றது. வேறு எழுவர்களுக்கு ஒரு வருஷ சிறைத்தண்டனையும் ரூ. 100 அபராதமும் தவறினால் மேலும் 2 மாதமும் தண்டனை அளிக்கப் பட்டிருக்கிறது.

---



Edited, Printed and Published by Raya Chookalingan for The India Publications Ltd., at the Oolian Power Press, Karaikudi.

